உ

சிவமயம்

# திருஅம்பர் தலக் குறிப்பு.

"சீர்பூத்த மணங்கவரும் பொறிதனைச் சார்ந்தொன்றிய மாதிரமுநாளும்
ஏர்பூத்த விடுதல பிறி தொன்றனுக குணமையு மிதயாத தெணணியாநத
நீர்பூதத பொறியுவபபவுரிவிடயமிட மணங்கூர நிலததுமாவும்
வார்பூதத புழைததடக்கை யொருகோட்டு வாரணததை வணங்கி
[வாழ்வாம்"

இப் பூவுலகின்கண் எல்லாம் வல்ல இறைவனுகிய சிவபெருமான் ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கின்ற தலங்கள் பல உள. சைவ சமய ஆச்சாரியார்களால் தேவார திருப்பதிகங்கள் பாடப் பெற்றனவாய் இச் சோழவள நாட்டில் 190 தலங்களிருக்கின்றன. அவற்றுள்ளும் காவிரி நதியின் தென்பாலமைந்துள்ள தலங்கள் 127. அத் தலங்களில் திருஅம்பர் பெருந்திருக் கோவிலும் ஒன்று. திருமுறையில் 55வது திருத் தலமாக வைக்கப்பெற்றிருக்கிறது. மாயவரம்—திருவாரூர் கிளைப் பாதையில் பூந்தோட்டம் புகைவண்டி நிலையத்திலிருந்து கிழக்கே, நாகப்பட்டணம்—காரைக்கால் முதலிய இடங்களுக்குச் செல்லும் ரஸ்தாவில் $2\frac{1}{2}$ மைல் தூரத்திலுள்ளது. நகர்ப்புறம் மேற்பாலும், மற்றைய விளை நிலங்கள் கீழ்பாலும், பல தெருக்களையும், புன்செய் நிலங்களையும், தென்னை, மா, இலுப்பை முதலிய சோலைகளையுங்கொண்டதொரு சிறிய நகரமாக விளங்குகின்றது, தற்போது அம்பல் எனப் பெயர் வழங்கப்படுகிறது. (இங்கு தபால் ஆபீசும் உண்டு.)

## கோவில் அமைப்பு.

கிழக்கு நோக்கியது. நாற்புறங்களும் இலுப்பை மரங்களாலான சோலையின் மத்தியிலமைந்துள்ளது. கோவிலின் எதிரில் வடபாகத்தில் "இந்திர தீர்த்தம்" என்றொரு திருக்குளம் உண்டு. (தற்போது நீரில்லை. சீர்திருத்தம் செய்யவேண்டும்). முன்புறத்தில் சிறிய கோபுரம் உண்டு. கோவில் கிழக்குமேற்கில் $241\frac{1}{2}$-அடிகளும் தெற்கு வடக்கில் $168\frac{1}{2}$-அடிகளும் கொண்ட விஸ்தீரணமுள்ளது. இக்கோவில் திருவீதியையுஞ் சேர்த்து மூன்று பிரகாரங்களை உடையது. கோவிலினுள்ளே சென்றதும் அக்கினிபாகத்தில் புன்னை மரத்தினடியில் (தல விருக்ஷம்) ஆதி மூர்த்தியாகிய சிவபெருமான் மேற்கு நோக்கி இலிங்க வடிவினராய் வீற்றிருக்கிறார். இதனருகிலேயே மேற்பால் "அன்னமாம் பொய்கை" என்ற

ஒரு தீர்த்தமுண்டு. இக்கோயிலே மாடக்கோயில், மலைக்கோயில், யானையேறுத் திருப்பணி என்றும் சொல்வதுண்டு. மலையில் ஏறும் பாதை தெற்குநோக்கிப் படிக்கட்டுகளை உடையதாக யிருக்கிறது. மலைக்குச் செல்லும் முன்னரே கிழக்குநோக்கி தல பிரதான விநாயகர் ஆலயமிருக்கிறது. அவரைப் படிக்காசு விநாயகர் என்றும் கூறுவதுண்டு. மலையின்மேல் வடபாகத்தில் கிழக்கு நோக்கி ஸ்ரீ பிரம்மபுரீஸ்வரர் இலிங்க வடிவினராகவும் பின்புறத்தில் கைலங்கிரியை ஒப்ப, பார்வதி பரமேஸ்வரர், ஸ்கந்தர், கணபதியுடனும் இருக்கின்றார்கள். வலப் பாகத்தில் ஸ்ரீ நடராஜர் சபையும், இடப்பாகத்தில் ஸ்ரீ சோமாஸ்கந்தரும் மற்றைய உற்சவ விக்ரகங்களும், மலையின் ஈசான்யத்தில் நவக்கிரகங்களும், சுவா சன்னதிக்கு எதிரில் தென்புறமாக மேற்குநோக்கி சைவ ச ஆச்சாரியர்களும் பிரம்மா சரஸ்வதியும் இருக்கின்றனர். மலையி கீழ் தெற்கு நோக்கி ஸ்ரீ சுகந்த குந்தளாம்பிகை சன்னதி. (இங்கு அம்பிகைக்கு ஆண்டுதோறும் தை மாதக் கடைசி வெள்ளியன்று இலக்ஷார்ச்சனை பூர்த்தியும், விசேஷ அபிஷேகமும், சந்தனத் திருக்காப்பும், அலங்காரமும், புறப்பாடும் உண்டு). அம்பிகை வேண்டுவார் வேண்டுவதை அப்போதே ஈயும் கலித் தெய்வமாய் விளங்குகின்றாள். அம்பிகை சன்னதியின் முன்மண்டபத்தில் ஸ்ரீ சனீஸ்வர பகவான் இருக்கிறார். மலையின்மேல் சுற்றி வருவதற்கும் ஒரு பிரகாரம் உண்டு. கீழே பிரகாரத்தின் மேற்பக்கத்தில் ஸ்ரீ விநாயகர், சுப்ரமணியர், மகாலெக்ஷ்மியும், வட பக்கத்தில் பிரம்மா, துர்க்காம்பிகை, சண்டிகேச்சுரர், அகிலாண்டேச்சுரரும், சன்னதியின் வடபால் கீழ் பிரகாரத்தில் ஸ்ரீ பைரவரும், சூரியனுமிருக்கின்றனர். அம்பிகை கோவிலுக்கும் கிழக்குப் பிரகாரத்துக்கு மத்தியிலும் தெற்கு நோக்கியுள்ளது வசந்தமண்டபம். கோவில் மதிலுக்குத் தென்பால் மேற்குநோக்கி யோகசாஸ்தாவின் கோவிலிருக்கிறது.

**திருப்பணி**: முதன் முதலாகக் கோச்செங்கட் சோழ நாயனுராலும், பின்னர் காம்போஜ தேசத்து அரசனை நந்த ராஜனாலும் வெகு காலத்துக்குமுன் திருப்பணி செய்யப்பட்டது. மிக மிகக் கிலமாயிருந்தது எனினும் நாட்டுக்கோட்டை நகர மக்கள் எவரும் இங்கு வரவில்லை. ஆயினும் அவர்களும், அம்மா! பெரிதென வியக்கும் தோரணையில், கோவில் நிர்வாகிகளே கோவில் நிதியைக் கொண்டு சிறப்புறத் திருப்பணி செய்து, தற்போதுள்ள கோவில் நிர்வாக அதிகாரி மதுரை எஸ். ஆர். சுப்பிரமணியம் அவர்களால் சென்ற கர வருடம் ஆவணி மாதம் 4ம் தேதி திங்கட்கிழமை (20—8—51) யன்று கோவில் செலவில் மகா கும்பாபிஷேகப் செய்விக்கப்பட்டது.

*மூர்த்தி:* சுவாமியின் திருநாமம் — ஸ்ரீ பிரம்மபுரீஸ்வரர், அம்பரீசர், மாரபுரீஸ்வரர்.

**அம்பிகை:** அம்பாளின் திருநாமம்-ஸ்ரீ சுகந்தகுந்தளாம்பாள் பூங்குழல் நாயகி, வண்டமர் பூங்குழலி, வம்பவனப் பூங்குழலி.

**தீர்த்தம்:** (1) இந்திர தீர்த்தம் (2) அன்னமாம் பொய்கை (3) சூல தீர்த்தம் (இது இக்கோவிலின் அக்கினி பாகத்திலிருக்கும் ஸ்ரீ சட்டநாத சுவாமி கோவிலுக்குள் அக்கினி பாகத்தில் கூவமாக (கிணறு) யிருக்கிறது.) இதன் சிறப்புப் பின்வரும் செய்யுளால் விளங்கும்.

> குட்டநோய் தொழுநோய் காசம் குன்மநோய்
> அட்டநோ யானமற்றும் சூலத்தீர்த் தத்துள்மூழ்கி
> யுட்டவ ரன்புபொங்க உயர்புவ னேசமேவி
> இட்டமார் வடுகப்புத்தேள் பதந்தொழ விரியுமன்றே.
>
> — அம்பர் தலபுராணம்

**வருவாய்:** கோவிலுக்குச் சொந்தமான 210 ஏக்கர் 65 சென்டு நன்செய் நிலங்களும், 73 ஏக்கர் 37 சென்டு புன்செய் நிலங்களும், இலுப்பை, தென்னை, மா, புளி முதலிய மரங்களும் உள்ளன. இவற்றிலிருந்து வருடம் ஒன்றுக்கு ரூ 20,000/–க்குக் குறையாமல் வருமானம் கிடைக்கின்றது. அரசியலாரிடமிருந்து மோகினித் தொகை ரூ. 219—0—9 கிடைக்கிறது.

**தினசரி பூஜா காலங்கள்:–**

| | | | |
|---|---|---|---|
| 1. | காலை சந்தி | 9-மணி | (காலை) |
| 2. | உச்சிக் காலம் | 12 ,, | (பகல்) |
| 3. | சாயுங்காலம் | $5\frac{1}{2}$ ,, | (மாலை) |
| 4. | இரண்டாம் காலம் | $7\frac{1}{2}$ ,, | (இரவு) |
| 5. | அர்த்தசாமம் | 9 ,, | (இரவு) |

நித்திய நைமித்த விழாக்களும், பஞ்ச பருவ உற்சவமும், நடராஜர் அபிஷேகங்களும் சிறப்புற நடைபெறுகின்றன.

ஸ்ரீ சட்டைநாதர் உற்சவம் வெகு விமரிசையாய் வருடந் தோறும் தவறுமல் நடைபெற்று வருகின்றது,

**காலம்:** பங்குனி-மீ கடைசி ஒன்பது நாட்களிலும் வருடப் பிறப்பன்று வரும் உற்சவ இறுதி நாளிலும் அபிடேக அலங்காரம் புறப்பாடும் சிறப்புற நடைபெறும்.

**நிர்வாகம்**: சென்னை இந்து மத தர்ம பரிபாலன ஆக்ட் G. O. M. S. 3894 P. H. dated 26-10-1939 and Ex-Board order No. 6142 dated 3-11-1939படி அம்பல் ஸ்ரீ பிரம்மபுரீஸ்வர சுவாமி கோவில் நோட்டிபிகேஷன் (Notified temple) செய்யப்பட்டு தற்போது சென்னை இந்து மத தர்ம பரிபாலன இலாகாவின் கண்காணிப்பில் இருந்துவருகிறது. கோவில் நிர்வாகம் சரிவர நடைபெற மாதச் சம்பளம் பெறும் ஓர் நிர்வாக அதிகாரியும், சென்னை இந்து மத தர்ம பரிபாலன இலாகாவின் கமிஷனர் அவர்களின் ஆர்டர் No. 489 dated 13—12—1952 படி தற்போது மூன்று டிரஸ்டிகளும் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். கோவில் நிர்வாக அதிகாரிக்கும், டிரஸ்டிகளுக்கும் உள்ள அதிகாரங்கள், வேலைகள் யாவும், சென்னை H. R. and C. E. Act. 1951 Section 67 (2)ல் கண்ட டிராப்ட் ரூல்களில் தெளிவாக விவரிக்கப்பட்டிருக்கிறது.

**P. சோமசுந்தரம் பிள்ளை,**
மிராசுதார், கொங்கராயநல்லூர்,
மானேஜிங் டிரஸ்டி.

**S. R. சுப்பிரமணியன்,**
நிர்வாக அதிகாரி.

**S. நமசிவாயம் பிள்ளை,**
மிராசுதார், மானாந்தகுடி.
டிரஸ்டி.

**R. G. சீனிவாச அய்யர்,**
மிராசுதார், ரெட்டக்குடி.
டிரஸ்டி.

உ

சிவமயம்.

ஐங்கரத்தன் துணை.

# திருஅம்பர் தல வரலாறு.

### படிக்காசு விநாயகர் துதி.

" அடிக்காசு மணம் மாற்று டர்ந்தூறு செயினசல வனறியாவி
மடிக்காசு குணத்திரடியார் முன்னொடியா முனாமருவுந் தோன்றல்
கடிக்காசு வளர்படப் பூண் முடிக்காசு மதியொடணி கடவுளெங்கள்
குடிக்காசு தவிர்த்தருள் செய்படிக்காசு மழகளிற்றை குறித்து வாழ்வாம்"

(தல புராணம்)

முன்னொரு காலத்தில், தவ வலிமை மிக்க சனகர் முதலாகிய இருடிகள், புராணங்களை முற்று முணர்ந்தவரும், வியாசரின் வழித்தோன்றலும், இருடிகள் தலைவருமான சூத மகாமுனிவரிடம், பேரருட் செயல்கள் நிறைந்த சிவப் பெருமை குறித்துக் கேட்கலானார்கள். அங்ஙனம் அவ் விருடிகள் விண்ணப்பம் யாதெனில் :— இனிய சிவபக்திச் செறிவுற்ற மகா முனிவரேறே ! எல்லா உலகுக்கும் பற்றுக் கோடாய் விளங்குகின்ற சிவபெருமானது செம்பொருள் விரவிய சிவ வரலாற்றைச் சீவர்களாகிய எமக்கு அருள வேண்டும்; எங்கு, பிரம விட்டுணுக்கள் தேவர்கள் செப்பம் தரும் சிவ பூசனை செய்கிறார்களோ, எங்கு தீராத வல்வினை களையும், மாறாத நல் குரவையும், பல் பிறவித் துன்பங்களை யும், போக்குவதும், நலம் தருவதும், சாதிகளை விட்டகலச் செய்யும் பாவங்களையும், அத்தீவினைகளையும், விழிப்பு, கனா, உறக்கம் என்ற மூன்று அவத்தைகளையும், கலி இன்னலையும், போக்குவதனாலாகிய பொலிவு மிக்கதுமான சிவமாகிய செம் பொருளுக்கு இவ்வுலகில் சிறந்த தல முள்ளதோ, எத் தலத்தைக் கண்ட அளவிலேயே எல்லா உயிர்க்கும் பேரின் பம் கிட்டுகிறதோ, பிரம விட்டுணுக்களும் எத்தலத்தை விழைகிறார்களோ, எத்தலத்தில் எல்லா நோய்களும் பற்று விட்டு நீங்குகின்றனவோ, மெய், மொழி, மனங்களுக்கும் எட்டாத தீவினைகளின் கூட்டம் எத்தலத்திற் சென்றதும்

ஏக்கறுகின்றனவோ, மக்கள் முதலிய மாண்புமிக்க செல்வங்கள் எத்தலத்தில் அடையப் பெறுவனவோ, எத்தலத்தில் சிவ பூசனையால் பிரமர் முதலாய பெரும் பதவி கிட்டுமோ, எஞ்சிய தீவினையின் சுட்டத்தால் இவ்வுலகத்துப் பிறந்த உயிர்களுக்கு எத்தலத்தில் எவ்வுபாயத்தால் அவ்வினைகள் அகலுமோ, கதிரவனைக் கண்ட பனியும் இருளும், உதிக்கின்ற செங்கதிரைக் கண்ட கூகைகளும் போன்று எத்தலத்தைச் சென்றவளவில் அறியாமையாகிய இருள் கணப்பொழுதில் பின்னிட்டகலுமோ? அத்தகைய உயர்ந்தோர் தலத்தின் புனித வரலாற்றை நாங்களறிய நவில்வீர்" எனக் கேட்டலும், சூத மகாமுனிவர் சொல்லலானார் :—

"ஏ, இருடிகளே! நீங்கள் முக்காலமும் உணர்ந்தவர்கள். இருப்பினும் சிவ பத்தி வெள்ளத்தழுந்திய வென் சின்மொழிகளால் சுருங்கச் சிவ அமுதைத் தருகிறேன் கேண்மின்கள்! உங்கள் செவ்வழி புகுந்து சிந்தைவழி வழியட்டும் சிவானந்தம்! குண கடலுக்கு மேற்கே இரண்டு யோசனை தூரமும், ஆரூர்க்கு வடபால் ஒரு யோசனை தூரமும், பிரம விட்டுணுக்கள் பூவோராயிரத்தைக் கரத்தாற் கொய்து எம் அரற்கே அருச்சித்த திருவீழிமிழலைக்குக் கீழ்பால் ஒரு யோசனை தூரமும், மயிலாடுதுறையின் தென்பால் ஒரு யோசனை தூரமும், உள்ள இடத்தில்; நாற்கதியினராலும் வணங்கப் பெற்றதும், யாவருக்கும் பேரின்பப் பேரமுதை வாரி வழங்குவதும், மூன்று உலகங்களிலும் புகழ் பெற்றதுமான அந்த சிவத்தலம் நீங்கள் கூறியபடியே வேண்டுவார் வேண்டுவதை விழைந்தளிக்கும் பெற்றி உடையதாய் மிளிர்ந்து வருகிறது. பிரமனும் கூறுணுப் பெரும் புகழ் மிக்கது. சிவனே அதன் செம்மையைச் செப்ப வல்லவர் மேலும் அத்தலம் பிரமபுரி, பிரமகிரி, அம்பராம்பபுரி, மா புரி, மகாகாளிபுரி, மகாகாளபுரி, மாரஜ்யவபுரி, நந்தராஜபுரம் புன்னுகவனம், சம்பகாரணியம் எனப் பல பெயரொடு மிளிர்கிறது. கூற்றுவன்பால் அச்சம் கொளத்தக்க மனித அங்கு இல்லை; 'நமனை யஞ்சோம்' என்ற பெருமிதம் அவ களுக்கு! யாவராயினும் சரி! இந்த பிரமபுரி தலத்தை

யடைந்து, தீர்த்தமாடி, சிறிது பொருளை மறை கற்ற அந்தணர்க்களித்து, இயன்றவரையில் பிரமபுரீசர் திருக் கோயிலை வலம் செய்து பணிந்து, பின் அந்தணர்க்கும் ஆதுலர்க்கும் அறுசுவை யுண்டி உண்பித்தால், அவர் நற்பதம் பெறுவர்; பிரமபுரீசரை வணங்கிப் பெறுது முத்தி விழைவோன், பசி நீங்க அமுதருந்தாது நஞ்சுண்பானேடொப்பான். இப்பிரமபுரீசரைக் காணுதவனை ஊழிதோறூழியும் சம்சாரத்தினை அருது! ஆகையால், பிரமபுரீசரை வணங்கிச் சம்சாரமென்னும் பேரிடும்பைப் பெருங்கடலைக் கடக்க வேண்டும்; இருடிகளே! அப்பிரமபுரீசர் அறப் புகழைச் சொல்லப் புண்ணியம் செழிக்கும்; கேட்கப் பாவம் தொலையும்; நினைக்க வீட்டுலகம் அணுகும். இத்தலத்துத் தென்பால், அரியைச் சலிக்கும்படிச் செய்ததால், அரிசலை என்ற பெயரொடு கூடிய ஓர் நதி உளது. இப்பேரியாறு, எல்லாப் பாவங்களையும் போக்குவதுடன், அறம் பொருள் இன்பம் வீடென்னும் நாற்பொருள் பயக்கும் நலம் வாய்ந்தது. இதன் பெருமை வீரழந்து பிரானை நாடுபவன் எண்ணரிய பாதகனே யாஞனும் இன்பம் பெறுவான். பாவங்கள் நீங்கும். இவ்வாற்றை உள்ளத்திருத்தி வேறெங்கே நீராடினும், எப்பாவங்களும் தொடராது தொலையும்; பொதுவாக காவேரியே பெரும் புண்ணியம் தரும்; அதிலும் சிறப்பாக இத்தலத்தோடும் இக்காவிரியோ, மிகப் புண்ணிய மேன்மை தரும். மேலும், பிரமபுரி நாதனுக்குக் கீழ்பால் பிரமனால் உற்பவிக்கப்பட்ட 'ஹம்ச புஷ்கரணி' என்ற தீர்த்தமும் உள்ளது. இத் தீர்த்தத்தில் தவம், அற வளர்ச்சி, சிவ சிந்தனை என்ற மூன்றையும் முழுகுவோர் பெறுவர்; வீட்டுலகமும் எளிதிற் கிட்டும். அதில் நாடோறும் மூழ்குவதால் நண்ணப் பெறுததெது? அவ்வன்ன தீர்த்தத்தில் முழுகி நீராடல் பாவங்களை யெல்லாம் போக்கடிக்கும். நீராடாதவன் பிறப்பு வீணே. மூன்று உலகங்களிலும் இதனிற் சிறந்த இனிய நீர் இல்லை. சீவர்களுடைய மூன்று உடம்பாலும் உற்பவித்த பாவக் கூட்டம் என்ற சேற்றைப் போக்கிச் சிவ மணங்கமழும்படிச் செய்வது இத்தீர்த்தமே யாகும். இத்தலத்தின் எழிலை என்னல் இயம்பிடற் கெளிது மன்று. இத் தலத்தை

யும், மூர்த்தியையும், தீர்த்தத்தையும் பேசாத, சூழாத, வணங்காத நாளெல்லாம் பிறவா நாளேயாம் எனவுரைத்துச் சூத மகாமுனிவர் பிரமபுரீசரையும், அம்மை வம்பவனப் பூங்குழலியையும் பல வணக்கப் பாக்களால் வணங்கினர்.

(இவ்வரலாறு, ஸ்காந்த உப புராணத்தில் அகஸ்திய சம்ஹிதையில் 37-வது அத்தியாயம், பிரமபுரீச மகாத்மியத்தில் முதல் அத்தியாயமாகும்.)

## 2. அயனரி முதலியோர் செருக்கடக்கியது.

முன்னொரு காலத்தில், கிருதயுகத்தில், இமய மலையை யடைந்த விண்ணோர்கள், அங்கோர் மலைச் சிகரத்து மன்னி யிருந்த பிரமனைக் கண்டார்கள். பரத்துவமாக மனம் குழம்பிப் போயிருந்த அவர்கள் தெளிவுற வேண்டுமென்ற உள்ளம் கொண்டு, பிரமனை அண்மிப் பின் வருமாறு விண்ணப்பித்துக் கொண்டார்கள். 'எல்லா உலகையும் படைக்கும் தேவ உத்தமரே! எங்களுக்குப் பரத்துவத்தில், ஓர் ஐயம் உண்டாகி யிருக்கிறது. அதாவது, உலகம் உம்மால் ஆக்கப்படுகிறது; விட்டுணுவால் காக்கப்படுகிறது; உருத்திரனால் ஒழிக்கப்படுகிறது. மகாதேவர், பரமேசுவரர் என்ற பெயர்களால் உருத்திரர்க்குப் பரத்துவ மிருக்கிறது. ஆகையால் மும்மூர்த்திகளில் யாவர் மூர்த்தி என்பது எங்களுக்குத் தெரிய வேண்டும்?

என்று சொல்லிய சூத மகாமுனிவர் மேலும் சொல்லுகிறார்: இப்படி தேவர்கள் விண்ணப்பம் கேட்ட வேதாவும், இராஜஸ குணம் மேவப் பெற்றவனாய், நிமிர்ந்த வார்த்தைகளால் உரைக்கலானார் :— "தேவர்களே! நான் தான் உலகங்களை ஆக்கியவன்; காப்பவன்; அழிப்பவன், தூயமனதுடன் கேண்மின். சொல்லுகிறேன். என்னைத் தவிர வேறு பரத்துவமே இல்லை. விட்டுணுவும் சிவபிரானும் எனது அமிசம். ஆகையால், எல்லா உயிரிடத்தும் இலங்கும் எழில் உருவினன் நானே. 'நான் பிரம்மமாக இருக்கிறேன்' என்று கூட சொல்லப்பட்டிருக்கிறது." என்று கூறினர். கேட்ட தேவர்கள் வியப்பெய்தி, இவ்வுண்மையை நன்றாகத் தெரிந்து கோடல் வேண்டுமென நினைத்து வைகுந்தத்தை யடைந்து,

விட்டுணுவைப் பணிந்தெழுந்து, துதித்துப் பிரமனிடம் கேட்ட ஐயத்தை மீண்டும் கேட்டார்கள்; உடனே விட்டுணுவும் விளம்பலானார் :— "தேவர்களே! கேண்மின்கள். உங்கள் உள்ளம் என் விடையாற் றெளிவடையும். ஆதியில் பிரமனின் பிறப்புக்குக் காரணம் நானே. நீவிரெல்லாம் இதனையறிமின். நானே பரத்துவம்" எனக் கூறி விட்டுப் பிரமனை மனத்தானினைக்க, பிரமரும் முன்தோன்றினராக, — "பிரமனே! உனக்கு இந்த அறிவிலாத் தன்மை யாண்டிருந்து வந்தது? உன்னைத் தவிர வேறு பரத்வம் இல்லையென்று புகன்றாயாமே!" எனக் கேட்கவும், பிரமர் மிகச் சினமடைந்து கொடிய வார்த்தைகளால் விட்டுணுவை நிந்திக்கலானார். உடனே உலகக் காப்பாளராகிய விட்டுணுவும் யுத்தம் துவங்கினார். முதலில் சொற்போர்; அடுத்து உடற்போர்; பிறகு விற்போர்; இவ்வாறாக, போர் முற்றியது. தேவரெல்லாம் அஞ்சிப் புலம்பலாயினர். உடனே விட்டுணு, நான்கு வேதம், காயத்திரிகள், பிரணவம் என்பன எல்லாவற்றையும், ஆங்கு வரும்படித் திருவுளம் பற்றினார். காயத்திரிகளும், பிரணவங்களும் தத்தம் அங்கங்களுடன் அவ்விடத்துத் தோன்றின. விட்டுணு கண்டு ஆதரவுடன், 'நீங்கள் பரத்துவத்தையும், பரமாத்மத் தன்மையையும் கூற வேண்டும்' எனத் தேவர்களின் முன்னாக வினவினார். இருக்கு வேதம் — பரத்துவமாயுள்ளவர் பரமேசுவரனே எனவும், யசுர் வேதம் – பினாகபாணியான ஈசுவரனே பரத்துவம் எனவும், சாம வேதம்—மகாதேவனான ஈசனே பரமாத்மா எனவும், அதர்வண வேதம்—பரதத்துவமானவர் மகேசனான ருத்திரனே எனவும், எல்லாவிதக் காயத்திரிகளும் தங்கள் தங்கள் மூர்த்திகளின் உள்ளுறை பொருளாக இருக்கின்ற சிவனே, பிர்ம காயத்திரி—பரச் சிவனே பரதத்வம் என்பதாகப் புகலவும், இவ்வார்த்தைகளைக் கேட்ட பிர்மர் சொல்லுவாரானார்: எல்லாப் பற்றுக்களையும் துறந்த பரப்பிர்மம் எங்கே, எப்பொழுதும் தன் பத்தினியோடும் கர்வம் கொண்ட சிவனெங்கே, என்று கேட்கலானதும், உருவமற்ற பிரணவம் உருவமடைந்து பிர்மாவுக்கு விடை கூறலாயிற்று. இந்தப் பரமாத்மா தன் ஆத்ம உருவத்தைக் காட்டிலும்,

வேறான பத்தினியோடு இருக்கவில்லை. இந்த ருத்திரனை மகேசரோ சுயஞ்சோதி. சனாதனர். தன் ஆனந்தத்திலுற்பவித்தவளை தேவியெனச் சொல்லியும், பிர்மாவின் அஞ்ஞானம் ஈசமாயையால் விடவில்லை. இதற்குள் ஆங்கண் ஓர் சோதி தோன்றியது. வானத்திற்கு மேல் வளர்ந்த ஓர் தழலுரு, அதனிடையில் தேவியோடுகூடக் கோபத்தினால் எல்லா உலகமும் கனன்றெரியும்படிப் பிர்ம விட்டுணுக்களின் செருக்கை அடக்குதற்காகச் சோதி லிங்கமாகத் தோன்றினர். பிர்ம விட்டுணுக்களை நோக்கி, ‘நீவிர் என் அடி முடிகளைக் கண்டு வருவீராயின், நீவிர் பூசனைக்குத் தக்கவர்களே, என்று கூறவும், மகாவிட்டுணு உடனே பன்றியுருக் கொண்டு பாதாள லோகம் நோக்கிச் செல்லவும், பிர்மா அன்னவடிவெடுத்து சிவனது சென்னியைக் காண வானத்தை நோக்கியும் செல்லலானார். இவ்வாறு ஆயிரம் ஆண்டுகள் பிரம விட்டுணுக்கள் மேலும் கீழுமாய்ச் சென்று கொண்டேயிருந்தனர். முடிவில் விட்டுணு அடி காணாதபடிக் களைப்புற்றுத் திரும்பிச் சிவனை வணங்கி நின்றனர். பிர்மாவும் சிறகெலாம் அறுந்து பறக்க முடியாதபடி முடியைக் காணாமலே திரும்பியும், தந்திரத்தால் வெல்லக் கருதி, பரமேசுவரனால் மோஹமடைந்து மனதால் உண்டு பண்ணப்பட்ட ஓர் தாழம்பூவை பொய்க்கரி கூறச் செய்து, ஈசன் சந்நிதியை யடைந்து ‘உம் முடியைக் கண்டு விட்டேன்; அதற்கு நும் சென்னியினின்றும் வீழ்ந்த இத் தாழம்பூவே கரியாகும்’ — என்றார். கேட்ட சிவபெருமானார், தம் ஞானக் கண்ணால் நிகழ்ந்ததை அறிந்து வெகுண்டு, பிரமனை அன்ன உருவடையும்படியும்; தாழம்பூவை ‘சிவ பூசனைக்கு உதவாதொழிக’ எனவும் சபித்தார்; அச்சம், களைப்பு இவற்றுடன், சிவபெருமானைக் கருணை வழிய வேண்டுமென துதிக்கத் தொடங்கிய பிரமனது மெல்லிய அபயக் குரல், சிவபிரானது உள்ளத்தைக் கரைத்தது.

## 3. பிரமன் பூசித்துப் பேரருள் பெற்றது.

உள்ளங் கரையத் தெள்ளிய தீனக் குரல் எழுப்பிய பிரமதேவரை நோக்கிச் சிவபெருமான் வேண்டிய வரத்தைக்

கேள் எனவும், பிரமன் மகிழ்ச்சி பொங்க 'கருணாநிதி யே! நான் மாயைச் சுழியினின்றும் விடுபட வேண்டும், என்னை நும் சேவடி மறவாச் செம்மலாக்குதல் வேண்டும். என வேண்டினார். பிரமனை நோக்கிச் சிவபெருமான் பின் வருமாறு உரைக்கலானார் :— "கங்கை நதி பாயும் கவின் நிறைந்த நாட்டில், புண்ணியங் கொடுக்கும் காசி பொலி கின்றது. அதன் பின் இத்தென்னாட்டில் காஞ்சியும், அதற் கும் தெற்கே புண்டரீகபுரமும், அதற்கும் தெற்கே மயிலாடு துறையும் அதன் தென்பால் புன்னாகவனம் என்னும் திருப் பதியும் உள்ளன. அப்புன்னாகவனம் எல்லாச் சித்திகளும் ஈயவல்லது. தவப் பயனை அடைவிக்கும்; அத்தலத்தை அடைந்து நீ என்னைக் குறித்துத் தவஞ் செய். யான் உனக்குப் பல நலங்களையும் அருளுவன், எனக் கூறிப் பின் சிவபிரான் கைலையை அடைந்தார்.

[ ஆதியில் புன்னை மரங்களாலான பெரிய வனமாகவும், அதன் மத்தியில் சிவபிரானுமிருந்தமையால் இப் பெயா வழங்கப்பட்டது. இத்தல விருக்ஷம் புன்னை மரம். ஆதி மூர்த்தியாகிய பிரான் அன்னமாம் பொய்கையின் கீழ்பால் புன்னை மரத்தினடியிலேயே இலிங்க வடிவுடையராய்க் கோயில் கொண்டுள்ளார். வருஷந்தோறும் நடைபெறும் மாசி மாத மக நக்ஷத்திரத்தன்று பிரமன் அன்னவுரு விமோசனமாக வேண்டி தவமியற்றுங் காட்சி உற்சவ மாக நடைபெறுவதை அன்பர்கள் யாவரும் காண வேண்டியதொன்று. ]

இங்ஙனம் சிவபிரானால் ஏவப்பட்ட பிரமாவும் தனது இதயத்தைச் சிவனுக்காக்கிக் காசி முதலிய தலங்களை யடைந்துப் பின் புன்னாகவனத்தைப் புனிதமான உள்ளத் துடன் சென்றடைந்தார். அங்குள்ள இருடிகளைக் கண்டு அளவளாவி, சோமாஸ்கந்தர், கணபதி, நந்தி, கைலாயம் இவற்றுடன் எப்போது வருவாரோ எப்பெருமான், அது வரை தவம்புரிவேன் எனத் திண்ணமுடன் எண்ணி அத் தகைய உள்ளத்துடன் பதினாயிரம் வருடங்கள் கடுந்தவம்

புரிந்து கொண்டிருந்தார். அத்தவத்தினின்றும் எழும்பிய சோதிச் சுடர் எல்லா உலகையும் வருத்த ஆரம்பித்தது. விண்ணோர் வெருவந்தனர். விட்டுணுவை யடைந்து முறை யிட்டனர். விட்டுணுவும் தேவருடன் கைலாய மடைந்து நந்தியார் உத்தரவு பெற்றுச் சிவபிரானைக் கண்டு வணங்கி துதி பல பாடிக் குறையிரந்தார்கள். 'யாவரும் கவலற்க' என அபயம் தந்த கண்ணுத லண்ணலார் நான் உங்களுக்கு என்ன செய்யவேண்டுமெனக் கேட்கவும், விட்டுணு விளம்பு வாற்றூர் :— "காட்டில் — புன்னைகவனத்தில் — தங்களை நோக்கிப் பிரமா கடுந்தவம் புரிகிறார்; அதனின்றெரிக்கும் சுவாலை எல்லா உலகங்களையும் எரிக்கின்றது. கைலாசாதி பரி வாரங்களுடன் தங்களைக் காண வேண்டுமெனத் திடசித்தத் துடன் மாதவம் புரிகிறார் என விட்டுணு விளம்பக் கேட்டு, சிவபிரான் அவ்விதமே, கைலாயம் இடபம் நந்தி முதலிய தேவ கணங்களுடன், விநாயகர், சண்முகம் என்னும் பரி வாரங்களுடன், தேவர்கள், விட்டுணு எனுமிவர்களுடன் புன்னைகவனத்தை அடைந்து பிரமனின் முன் தோன்றினர். பிரமனும் பரிவாரங்களுடன் கூடிய ஈசனைக் கண்டு, மகிழ் வெய்தி வலம் வந்து வணங்கி யெழுந்துக் குளம் ஒன்று தொட்டு அந்நீரால் திருமுழுக்குச் செய்வித்து, வழிபாடு எல்லாம் விதி முறையாற்றிப் பூசனை செய்தார். பூசனைக்குள மகிழ்ந்த சிவபிரான் 'உனக்கு யாது வரம் வேண்டும்' என பிரமனைக் கேட்க, உடனே அன்ன உருவத்திலிருந்த பிரம னும், "எனக்குப் பிறப்பு வேண்டாம்; என்னாலுண்டாக்கப் பட்ட இந்த ஹம்ஸ புஷ்கரணி (அன்னமாம் பொய்கை)யில் மூழ்குவோர் தவம், அறவளர்ச்சி, சிவசிந்தனை என்ற மூன்றி னையும் அடைந்து பிறப்பின் பயனையும் எய்தியவராகி நின்னை யடைதல் வேண்டுமென வேண்டச் சிவபிரானும் அப்படியே யாகுக வெனத் திருவுளம் பற்றினர். உடன் பிரமா தன் அன்னவுரு நீங்கி, ஒளியொடுகூடிய தன் பழைய உருவத்தை அடைந்தார். "இவ்விடமே தாங்கள் கைலாய முதலிய பரி வாரங்களுடன் தாங்கள் வசித்து எல்லோரையும் அநுக்கிர கிக்க வேண்டும்" என்பதாய், ஈசனின் பாத கமலங்களில் சிரத்தை வைத்து வணங்கி ஆநந்தக் கண்ணீருடன் மல்கிய

கண்களொடு பரமாத்மாவாகிய சிவபிரானைத் துதித்தார். அவற்றால் உவகை பொங்கிய கைலாயநாதனும் அவ்வாறே யாகுகவென அருளி பிரமஞானத்தையும் அளித்தார். விண்ணோர் மகிழ்ந்தனர். அதுமுதல் கைலாயமலை முதலன வெல்லாம் அவ்விடத்தே விளங்கி வரத் தொடங்கின. அதனால், சுவாமியின் திருநாமம் 'பிரும்மபுரீசர்' என்றும், தலத்திற்கே 'கைலாயகிரி' என்றும், எந்த பரமேச்வரனால் பிர்மாவுக்குக் கொடுக்கப்பட்ட வரத்தினால், கைலாயமலை அவ்விடத்து விளங்கி வருதலால் 'பிர்மகிரி' என்றும், பிரமனால் உண்டாக்கப்பட்ட நகரத்தை உடையதனால் 'பிர்மபுரி' என்றும், பிரமனால் ஹம்ஸ ரூபமாயிருக்கையில் சிருட்டிக்கப்பட்டதால் 'ஹம்ச புஷ்கரணி' என்றும் விளங்கி வரலாயிற்று. இங்ஙனமாக பிரமனது வேண்டுகோட்படி அத்தலத்தில் எல்லாம் நடந்தேறியது. பின் மங்கை யொரு பாகத்தடக்கிய கண்ணுதலானும் தேவர்களுடன், பிரமனால் பூசிக்கப்பட்டுக் கைலாயத்தை யடைந்தான்.

(ஸ்காந்தோப புராணத்தில் அகஸ்திய ஸம்ஹிதையில் 39 வது அத்தியாயம்; பிரம்மபுரீச மகாத்மியத்தில் மூன்றாவதத்தியாயம் முற்றிற்று.)

## 4. அம்பராம்பரர்களை அழித்தது.

இருடிகள் மீண்டும் சூத புராணிகரை நோக்கி, "இப்பிரமபுரியானது அம்பராம்புரி என்று சொல்லப்படும் என்று தங்களால் முன்னர்க் கூறப் பெற்றதே; பெருமை வாய்ந்த அம்பராம்பரர்களுக்கும் இத்தலத்திற்கும் உள்ள தொடர்பு யாது? அவர்களது வரலாறு முழுமையும் எங்களுக்கு விவரித்து விளம்பியருள வேண்டும்" என்று கேட்கச் சூத புராணிகர் சொல்லுகின்றார் :— "இருடிகளே ! அவர்களது விழையத்தக்க வரலாற்றைச் சொல்லுவல்; கேண்மின்கள். முன்னோர் காலத்தில், துர்வாசர் என்ற சிவபக்தி நிறைந்த முனிவர் சிவபிரானைக் காணுதற்காக ககனவழியாகச் சென்று கொண்டிருந்தார். அவ்வழியில் அழகுமிக்க இளமை வழியும் "மதலோலா" என்ற பெயருள்ள தேவகன்னி முனிவரைக் கண்டு காமவிகாரமடைந்து அவரை அண்மி, முனிவரை நோக்கிப், புத்திரப் பேற்றில் விருப்பமுள்ள யான் நும்மை

விழைந்து அவாவுகிறேன்; ஆதலின் தாங்கள் எனையடைந்து உமது விருப்பம்போல் நடக்க வேண்டும்' என வேண்டினாள். துர்வாசரும் அம் 'மதலோலா' வைப் பார்த்து மூடமே! கொஞ்சமும் அச்சமின்றி இங்ஙனம் கேட்டல் நன்றோ? இருப்பினும் உனக்குப் பிறரால் வெல்லப்படாத அசுராம்சமுடைய இரண்டு புத்திரர்கள் உண்டாகட்டும்' என்றுரைத்தார். இங்ஙனம் உரைத்த மாத்திரத்திலே, அவ்வாகாயத்தில் தானே முதலில் ஒரு பிள்ளையும், பின் இரண்டாவதாக ஒரு பிள்ளையும் இருடியின் வாக்கு வலிமையால் பெற்றெடுத்தாள். எவ்விதமான பிடிப்புமில்லாத ஆகாயத்திலே உண்டானதனால் அம்பரன் என்ற பெயரோடு எல்லா உலகிற்கும் பயமுண்டாக்குபவனாக முதல்வனும், அம்பன் என்ற பெயரோடு எல்லா பூதங்களுக்கும் கஷ்டமுண்டுபண்ணுகிறவனாய் இரண்டாமவனும் உண்டானார்கள். பின் துர்வாச முனிவரும் சிவபிரானைக் கண்டு வணங்கிப் பூசனை முதலியவற்றை விதிமுறை வழுவாமல் செய்துவிட்டுத் தன் இஷ்டம்போல் சென்றார். மதலோலையும் அந்த இரண்டு குமாரர்களைக் கண்டு மிக்க பயத்தையடைந்து அவர்களையும் அழைத்துக்கொண்டு ஈசன் முன்னிலையில் கொண்டுவந்துவிட்டு, ஈசனை வழிபட்டபின் வந்த வழியே சென்றுவிட்டாள். அவ்வசுரக் குழந்தையரிருவரும், சிவனருளாலும், மாமுனிவரருளாலும் தக்க வலியடைந்து அரசர்களானார்கள். குரு சுக்கிராச்சாரியார் உத்திரவினால், சிவாலயமொன்று நிருமாணித்துத் தினந்தோறும் மூன்று வேளைகளிலும் சிவனை வழிபட்டு எல்லா உலகையும் இனிதே ஆண்டுவந்தார்கள். இருடிகள், தேவர்கள், சித்தர்கள், கின்னரர், மனிதர் முதலிய எல்லோரையும் சுக்ராச்சாரியாரின் போதனையினால் பிடித்தும் வந்தனர். காலம் கழிந்தது. பின்னொருகால் தங்கள் திருமணத்திற்கு எந்த குலத்தில் மணமகளைத் தேடவேண்டும்; அம்மகள் யாண்டு உள்ளாள் என்று சுக்ராச்சாரியாரைக் கேட்க அவரும் 'உலகில் எவ்வெவர் உருவம் அழகுடன் விளங்குகிறார்களோ அவர்களெல்லாம் உங்களால் நுகரப்பெறவேண்டும்; இதுவே அசுர தர்மமுமாகும்' என்றியம்பினர். குருவின் மனப்படியே நூறாயிரக் கணக்கில் பெண்களை ஒவ்வொருநாளும் பிடித்து

வந்து நுகர்ந்து வரலானார்கள், அவ்விருவரும்; அவர்களால் மானபங்கம் செய்யப்பெற்ற மங்கையர் பலரும் மண்ணினின்றும் விண் புக்கனர். இங்ஙனம் அவ்வசுரர்களால் பிடிக்கப்பட்ட தேவர்களும், இந்திரனுடன் சத்திய உலகம் சேர்ந்து பிரமனிடம் முறையிட்டுப்பின் அவரோடும் உலகம் காக்கும் திருமாலிடம் சென்று ஆலோசித்து, முடிவாக எல்லோரும் கைலாயத்தை அடைந்து சிவபிரானை வணங்கித் தொழுதபின்னர், விட்ணு சொல்லலுற்றார்.

'கருணைக் கடலே! இந்த அம்பராம்பாசுரர்களுடைய கொடுமைகளினின்றும் எம்மைக் காப்பாற்ற வேண்டுமென வேண்டிக்கொண்டார். சிவபிரானும் பக்கத்திலிருந்த பராசக்தியை நோக்க, 'மனோன்மணியும் என்னால் யாது செய்யப் படவேண்டும் இறைவா' என்னச் சிவபிரான் — "விட்ணுவுடன் நீயும் சென்று சீக்கிரமாகக் கொழுப்பு நிறைந்த அவ் வசுரர்களைக் கொன்று எல்லா உலகையும் காப்பாற்றவேண்டு மெனக்" – கட்டளையிட்டார். இவ்விதமாக இறைவனால் ஏவப்பெற்ற உலகிறைவியும், தன் அமிசமுள்ள அழகு வாய்ந்த கன்னிகையான காளிகாதேவியைச் சிருட்டித்து அவளை நோக்கி – "நீ மகாவிட்ணுவுடன் சென்று உலகக் காவல் செய்துகொண்டிருப்பாய்" எனக் கட்டளை யிட்டாள். தேவியின் பணித்த உத்திரவுப்படியே கிழ உருவம் தாங்கித் தளர்ந்த அங்கங்களோடு, நடக்கமுடியாத விருத்த ரூபம் தாங்கிய மகாவிட்ணுவைக் கைகளால் பிடித்தழைத்துச் செல்பவளாக இருவரும் அவ்வசுரர்கள் வசிக்கும் திரு அம்பரை யடைந்து வீற்றிருந்தார்.

(அவ்வாறு திருமால் வீற்றிருந்த யிடத்தில் ஸ்ரீ வீற்றிருந்த பெருமாள் கோவில் இருக்கின்றது. இங்கு காளியின் (மோகினி) சிலையுமிருக்கின்றது. இக்கோவில் பிரம புரீசர் கோவிலுக்கு மேல் திசையிலிருக்கின்றது. அக் கோவிலிலிருக்கின்ற செம்பினாலாகிய மோகினி தெய்வத்தின் உருவத்தை யாரும் பூசனை முறைமையிற் கூடத் தீண்டுவதில்லை. தீண்டிப் பணியேதும் புரிவதுமில்லை.

தூரயிருந்தே ஆடை முதலியவற்றைக் கோலின் உதவி கொண்டு சாத்தி வழிபடுகின்றனர். அங்ஙனம் செல்வோரும் பரிசுத்தமாகவே செல்லுதல் வேண்டும். இல்லையானால் பெருந்தீங்குகள் உண்டாவது நிச்சயம்.)

அழகுவாய்ந்த காளிகா தேவியையும் கிழரூபம் வாய்ந்த மகாவிட்ணுவையும் கண்ணுற்ற அவ்வசுரர்கள், நீ இக் குமரியை வைத்துக்கொண்டு என்ன செய்யப் போகிறாய்? இக்குமரியை எங்களுக்குக் கொடுத்துவிட்டால் உமக்கு அநேக நன்மைகளைச் செய்வோம். ஆதலின் நீ இக்குமரியை எங்களுக்குக் கொடுத்துவிடு. கொடுக்காவிட்டால் உம்மைக் கொன்றுவிட்டு இக்கன்னிகையை அடைவோம்' என்றார்கள். அவர்களைப் பார்த்துக் கிழ உருவம் தரித்த மகாவிட்ணு சொல்லலானார்: "நீங்களிருவரும் மகா அழகுடையவர்கள்; தைரியசாலிகள்; குணசாலிகள்; பால்யர்கள்; அழகுமிக்க அவயவங்களை உடையவர்கள். ஆகையால் இந்தக் குமரியை உங்களுக்குத் தருவதில் தடையில்லை. ஆனால் ஓரையம்! கன்னிகையோ ஒருவள்; காளையீரோ இருவீர்; ஆதலின் இருவரில் ஒருவர் ஏற்றுக்கொண்டு என்னையுமிவளையுமாதரிப்பீர்" என்றார். கேட்ட அசுரர்கள் கன்னிகைமேல் வைத்த காதன் மிகுதியால், ஒருவரின் ஒருவர் தாங்களே அடைய வேண்டும் என்று கையொடு கையும், முடியொடு முடியும், மரத்தாலும் மலையாலும் போர் புரிந்தனர். ஒரு நாள் கழிந்தது. வழிநாள் மாலையில் அம்பராசுரன் தன் இளையவனை வென்று அவனைக் கொன்றான். பின்னர் கன்னிகையை தானே அடையவேண்டும் என்ற பேராவல் முந்தப் பிராமணனிடம் வந்து கன்னிகையான காளிகாதேவியை ஆலிங்கனம் செய்யக் கருதினான். உடனே அக்கணத்திலேயே காளிகா தேவி தன் கன்யா ரூபத்தைவிட்டுக் கோரைப் பற்களோடு கூடிய முகமும், மண்டையோடு முதலிய ஆபரணங்களைத் தரித்தும் எல்லா துஷ்டர்களையும் கொன்று பத்ரகாளியானாள். அக்கோரமான வடிவைக்கண்ட அவ்வசுரன் பயந்து புறம் காட்டி ஓடலானான். அவன் எங்கெங்கு ஓடினாலும் அவ்விடங்களிலெல்லாம் தோன்றி யவ்வசுரனை விரட்டலானாள்.

அசுரனும் ஓடிக் களைத்து எதிர் முகமாகச் சண்டையிட ஆயத்தமானன். தேவியும், அப்பொழுது அவனைக் கீழே தள்ளி மார்பில் காலையூன்றி கழுத்தைத் துண்டித்து அவன் உயிரைப் போக்கினாள்.

[இவ்விடம், ஈசானிய பாகத்தில் 4-½மைல் தூரத்திலுள்ளது. அம்பகரத்தூர் என்று வழங்கப்படுகிறது. இங்கு காளியின் கோவில் மிகப் பிரசித்தமானது. வருஷா வருஷம் வைகாசி மாதத்தில் உற்சவம் சிறப்பாக நடைபெறுகிறது. இறந்த அசுரர்களின் ஆவி பிரமஹத்தியாகிக் காளியைத் துரத்த ஆரம்பித்தது. அதன் பொருட்டு அம்பரையடைந்து மேல்பால் இலிங்கம் ஸ்தாபித்துப் பூஜை செய்து ஹத்திதோஷம் நீங்கி இவ்விடமே தங்கி பக்தர்களுக்கு அருள் புரிகின்றனள்.]

ஸ்ரீ காளிகா தேவியின் திருப் பாதத்தால் மிதிக்கப் பட்டிறந்ததால் அவ்வசுரனது ஆத்மா சுவர்க்கத்தையடைந்தது. மகாவிட்ணுவுடன்கூட, விவாகம் இல்லாத கன்னிகையாக காளி உலகம் காத்தலை மேற்கொண்டு அத்தலத்தில் இப்போதும் வாழ்ந்து வருகிறாள். விட்ணு இத் தலத்தின் மேற்குப் பாகத்தில் நாடோறும் பிரமபுரீசரை வணங்கித் தொழுவதில் ஆசைமிக்கு இருந்துவருகிறார். எஞ்ஞான்றும் காளிகாதேவியுடன் உலகம் காக்கும் கருத்துடன் விளங்கி வருகின்றார். அசுரன் இறந்த இடம் மாணகளம் எனப் பெயர் பெறுவதாயிற்று. மகாவிட்ணுவின் இருப்பிடத்திற்கு வடபால் அம்மாணகளமுள்ளது. அம்பராம்பபுரீ என்ற பெயர் இந்தக் காரணத்தினாலேயே வழங்கி வருவதாயிற்று. காளி அதுமுதல் அவ்விடம் வசிப்பதால் 'மகா காளி புரி' என்ற பெயரையுமுடைத்தாயிற்று. மேலும் இப் பிரம புரிக்கு மேற்கே மருத மரம் சூழ்ந்த அர்ஜுன வனத்திலே மகா காளர் வசித்தலால், 'மகா காளபுரி' என்ற வேறோர் பெயராலும் வழங்கிவருகின்றது. இத் தலத்தின் தென்மேற்கு மூலையில் பக்தர்களின் கருத்துக்களை நிறைவேற்றிக்கொண்டு கைலாயநாதர் விளங்கி வருகிறார். பிரமபுரி நாதருக்குக்

கிழக்குப் பாகத்தில் விநாயகர் வசித்துக்கொண்டு சிவ பக்தர்களின் உள்ளத்தில் அருள் மழையைப் பொழிந்தவண்ணம் இருக்கின்றார். புவனேசுவரர், ஆபத்துத்தாரகர்—இவ்விருவர்களும் ஆக்நேயபாகத்தில் வசித்துக்கொண்டு உயிர்களுக்கு அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப் பொருள்களை வழங்கி வருகின்றார். மற்றும் பிரமபுரிநாதன் கட்டளையினால் ஐயனார் தெற்குப் பாகத்தில் பூர்ண புஷ்கராம்பிகா சமேதராய் காத்துவருகின்றார்.

(ஸ்காந்தோப புராணம் - அகத்திய சம்ஹிதை - 40வது அத்தியாயம்; பிரம்மபுரீசர் மகாத்மியத்தில் நான்காம் அத்தியாயம்)

## 5. சம்ஹாரசீலனை வதம் செய்தருளியது.

முன்னொரு காலத்தில், புலத்திய வம்சத்தில் அஞ்சத்தக்கவனை "சம்ஹார சீலன்" என்றொரு அரக்கன் இருந்தான். அவன் இமயமலை சென்று பிரமனைக் குறித்து பெருந்தவம் இயற்றினான். நூறாண்டு கடுந்தவத்துக்குப்பின் பிரமனும் காட்சி தந்தனர். வணங்கித் தொழுதேத்தி அவ்வரக்கன், தான் யாண்டு செல்லினும் வெற்றியே பெறத்தக்க ஓர் வரம் தந்தருள வேண்டுமெனப் பிரமனை வேண்டினான். பதினான்கு உலகங்களிலும் தேவர், அசுரர், சித்தர், கந்தருவர், மானுடர்போன்ற எவராலும அவனுக்கு அழிவில்லாமல அவனே ஜயசீலனாய் விளங்கும்படியான ஒரு பெருவரத்தை அவன் வேண்டிப் பெற்றான். பின்னந்த அரக்கன் பெருஞ்சேனையுடன் தேவருலகை வெல்ல எண்ணி இந்திரனது அமராவதி நகரை முற்றுகையிட்டனன். அதுகண்ட தேவர்கள் இந்திரனது தலைமையில் இகல்கொண்டு எழுந்தார்கள். தேவர்களும் அசுரர்களும் பயங்கரப் போர் புரிந்தனர். அவ்வலிமிக்க அசுரன் குந்தாயுதம்கொண்டு ஒவ்வொரு திசைக்கும் விரைந்து ஓடி தேவர்களை ஒழித்து பேரிடும்பை விளைத்தான். தன் சேனை நாலாபக்கங்களிலும் அழிந்தொழிவதைக் கண்ட இந்திரன் அக்கினியை வெல்லுமாறு ஏவினான். அக்னியும் சூலாயுதத்தை ஏந்திக்கொண்டு இரதமேறி இரணகளத்தையடைந்து அசுரப் படைகளில் பதினாயிரத்தை ஓர் நாழிகைப் போதில் அழித்துச் சின்னபின்னமாக்கினான்.

கலங்கியோடும் தன் படையைக் கண்ட அவ்வரக்கன் அக்கினியை நோக்கி விரைந்துவந்து கதையினால் தலையில் அடித்தான். அவ்வடிபட்ட அக்கினியும் இரதத்தினின்றும் இறங்கி வீழ்ந்து தப்பியோடி மறைந்தான். அவ்வரக்கனும் தேவர்களைத் துன்புறுத்தலானான். இந்திரனால் பின்னர் அனுப்பப் பெற்ற வாயு ஐயாயிரம் அசுரர்களை அழித்தான். அவ்வாயுவை சக்தியாயுதத்தினால் அவ்வரக்கன் தாக்கவே, வாயுவும் யுத்த களத்தினின்று ஓடியொளிந்தான். முயலாயுதத்தினால் அடிக்கப்பட்டவனாய் யமனும் ஓடலானான். பரிகாயுதத்தினால் அடிக்கப்பெற்றவனாய் வருணனும் ஓடலானான். குபேரனும், பன்னிரண்டு ஆதித்தர்களும், அஷ்ட வசுக்களும், மற்றுமுள்ள தேவர்களும் போர்க்களத்தில் அவனை எதிர்க்கமுடியாமல் ஓடிவிட்டனர். இறுதியில் இந்திரனை நோக்கி விரைந்தான் அவ்வரக்கன். ஐராவதத்தின் மீதேறியிருக்கும் இந்திரனும் போருக்கு ஆயத்தமானான். தன் வச்சிராயுதத்தினால் அரக்கன் மண்டையில் அடித்தான். அவ்வடியினால் மூர்ச்சையடைந்து கீழ் விழுந்த அவ்வசுரன் மூர்ச்சை தெளிந்து எழுந்து தேவராசனான இந்திரனைக் கையால் மார்பிற் குத்தவே, இந்திரன் யானையினின்றும் கீழே வீழ்ந்தான். இந்திரனின் சாரதியான மாதலி தேவராசனை மறைவிடத்திற் கொண்டொளித்தான். எல்லோரையும் வென்ற அவ்வசுரன் மகிழ்வுடன் திரும்பினான். தேவநகரம் அமராவதி வெற்றிடமாயிற்று. வெகு காலம் சென்றது. தேவர்கள் மிக்க துன்பமடைந்தவர்களாய் சத்தியலோகம் சென்று பிர்மாவிடம் முறையிட்டனர். பிர்மா அவர்களை நோக்கிச் சொன்னது பின்வருமாறு:

" பூமியில் பிர்மபுரி என்றொரு மகிமையான சிவத் தலமிருக்கிறது. அவ்விடம் வசிப்பவர்களுக்கு யாதொரு பயமுமில்லை. யம பயமும் கிடையாது. அவனைக் கொல்லும் வரையில் நீங்கள் அங்கு வாழுங்கள்; பிர்மபுரிநாதர் கட்டளையால், எல்லா பயத்தினின்றும், காலபைரவர் அங்குள்ளவர்களைக் காப்பாற்றி வருகின்றார். அவ்விடத்தில் எவ்வாற்றானும் அவ்வசுரன் வரமாட்டான். அப்படி வந்தாலும் அரனருளால்

அவர்க்கு நாசம் கிட்டும். நானும் அவனுடைய வதத்திற்கு உபாயம் செய்வேன்; நீயிரெல்லாம் சென்று பிரமபுரியில் வாழுங்கள்" என்றார் ஞானபிதா. அங்ஙனமே, இந்திரன் முதலாய தேவர்களும் ஆங்கு சென்று அச்சமின்றி வாழ்ந்து வரலாயினர். பின்னர் பிரமா நாரதரை அழைத்துத் தேவர்க்கான நன்மையைச் சொல்லத் தொடங்கினார்: "ஏ நாரதனே! பூலோகத்திற்குத் தீர்த்தயாத்திரை காரணமாகச் சென்று கொழுப்படைந்து கொதித்துள்ள அவ்வசுரனைக் கண்டுப் பிரமபுரியில் வசிக்கும் தேவர்களோடு போர் செய்ய ஏவுவாய்" என்று கட்டளையிட்டார். உடனே நாரதரும் பூலோகம் அடைந்து அவ்வசுரனிடம் "உன்னிடமுள்ள பயத்தினால் எல்லாத் தேவர்களும் பிரம்மபுரியில் பைரவரால் காக்கப்பட்டு வாழ்ந்து வருகிறார்கள். அதனால் உன்னிடம் அவர்களுக்குப் பயமே இல்லை. பைரவர் உன் பலத்துக்கு எம்மாத்திரம்; விரைந்து சென்று வெற்றி பெறுவாயாக" என்று உரைத்தனர். அசுரர் தலைவனான ஸர்வவிஜயியும் சினமிக்கவனாய், பிரம்மபுரியைச் சென்று முற்றுகையிட்டான். பாணங்களைத் தொடுத்துப் போருக்கழைத்தான். அறிந்த பிரமபுரீசரும் காலபைரவரை யழைத்து, 'சென்று தேவ விரோதியான அவ்வசுரனை அழித்து வருக'வென ஆணைதந்தார். இங்ஙனம் சங்கரனால் ஆணையிடப் பெற்ற பைரவரும் போர்க்கோலம் பூண்டு சென்று பகைவரைத் தடிந்தார். ஸர்வவிஜயியைத் தம் முஷ்டியாற் றடிந்தார். தேவர்களும் இருடிகளும் மகிழ்வெய்தி எல்லோரும் பிரம்மபுரீசருக்குப் பூசனை புரியலாயினர். பிரமபுரீசரின் திருமுழுக்குக்காக ஒரு தடாகம் அமைக்கப் பெற்றது. எல்லாப் பாவங்களையும் தொலைக்கும் அந்தக் குளத்திற்கு இந்திர தீர்த்தம் எனப் பெயரிடப் பெற்றது. பிறகு பிரம்மபுரீசர் இறைவியோடும் நந்திகேசர் கட்டியம் கூறத் தேவ பரிவாரத்துடன் இடபாரூடராகக் காட்சியளித்தார். இருடிகளும் பிறரும் வாழ்த்தெடுத்தனர். உடனே அந்தப் பிரம்மபுரீசர் கூறத் தொடங்கினார்: "இத்தலத்தை யடைந்து என் பாத கமலங்களை வணங்குபவர்களுக்குச் சத்துருக்களாலுண்டான எல்லா பயங்களையும் நீக்குகிறேன்" என்று கூறி, அவர்களிடையில் மறைந்தார்.

பின்பு பிரம்மபுரீசரது பெருங்கருணையால் அச்சம் இல்லாத
வர்களாய் தேவருலகில் இந்திரனால் ஆளப்பட்டு "இன்பமே
எந்நாளும் துன்பமில்லை" யாக வாழ்ந்து வரலானார்கள்.

(ஸ்காந்தோப புராணம்—அகஸ்திய ஸம்ஹிதை-41வது அத்தியாயம்;
பிர்மபுரீச மகாத்மியத்தில் 5வது அத்தியாயம்.)

## 6. விமலன் அருள்பெற்று உய்ந்தது.

சூதர் சொல்லுகிறார்: "முன்னொரு காலத்தில் காசிப்
பிரதேசத்தில் விமலன் என்றொரு அந்தணன் இருந்தான்.
அவன் மனையாளுடன் தீர்த்த யாத்திரை செய்து முறையே
ஒவ்வொரு தலமாகத் தரிசித்துக்கொண்டே காவிரி பாயும்
நாட்டை அடைந்தான். காவிரி நாட்டுத் தலங்கள் எல்லா
இடத்தும் உள்ள தீர்த்தங்களில் நீராடிச் சிவபக்தி செய்து
கொண்டு பிரமபுரத்தையும் அடைந்தான். பின் ஹரிசலை நதி
யிலும் பின் ஹம்ஸ புட்கரணியிலும் நீராடிப் புனிதமுடைய
வனாய் பிரமபுரீசனை வணங்கி அன்புடன் வலம் செய்தான்
வணங்கினான். பின் விமலன் அங்கேயே வாசம் செய்யக்
கருதிச் சந்நிதிக்கு வடபக்கத்தில் வீடு கட்டி அதில் வசித்துக்
கொண்டு நாடோறும் நலமிகும் தன் மனையாளுடன் ஸ்ரீ
பிரமபுரி நாதனை வணங்கி வந்தான். பின்னொரு சமயத்தில்
மார்கழி மாதம் வந்த காலத்தில், தினம் மூன்று தடவை
திருமஞ்சனமாடி, முப்பது நாளும் உபவாசம் இருந்து
நாடோறும் நூறு தடவை வலம் வந்து, உருத்திரனை நோக்கி
சபம் செய்து, பிரணவத்துடன் கூடிய ஐந்தெழுத்து சபம்
செய்து, முப்பது நாட்களும் கழிந்தபின் கடைசி நாளில்
இந்தப்படி செய்து பிரமபுரீசர் சன்னதியில் பல்லாற்றானும்
துதி செய்து கடைசியில், "ஏ கௌரி மணவாளனே! நான்
உன்னையன்றி வேறொருவரையும் பணிவதில்லை; உன் புகழ்
அன்றி வேறொன்றனையும் கேட்பதில்லை. உன்னையே சரண
டைந்திருக்கிறேன், என்னைக் காப்பாற்று" என்றெல்லாம்
வேண்டிக் கொண்டான். அடியவர் இடர் தீர்க்கும் அண்ண
லான சிவபிரான் அவ் விமலன் முன் தோன்றி "உன்
தோத்திரத்தால் மகிழ்வெய்தினேன். விமலனே! உன் மகிழ்
வுக்குக் காரணமான வரத்தைக் கேள்" என்று கேட்டார்.

மனையாளுடன் கை கூப்பிய விமலனும் ஈசனை நோக்கிச் சொல்லலானன்: "இறைவா! உம்முடைய காட்சியால் நான் புனிதனுனேன்; அதற்குப் பிறகும் நான் வேண்டுவதொன்றுண்டோ? இருப்பினும், காசி நகரத்தில் வசிப்பவனுன நான் தீர்த்த யாத்திரை செய்து வருங்கால் உமது திருத்தலத்தை அடைந்தவன். அந்தக் காசித் தலத்தில் கங்கையில் புனிதத் திருநீராடினவன். ஆனுல் காசிக்கு மீள எனக்குக் கருத்தில்லை. இந்தப் பிரமபுரத்திலேயே வாழக் கருதுகிறேன். நீராடுபவர்கள் பாவங்களை நீக்கும் அந்தக் கங்கையை இங்கு தாங்கள் வரவழைக்கவேண்டும். இவ்விடத்தில் பாவம் போக்கும் காவிரியும், ஹம்ஸபுட்கரணியும் இருக்கின்றன. அங்ஙனமேனும் அந்த கங்கையை இத் தலத்திற்கு வரவழைக்க வேண்டும். எனக்கு ஒரு புத்திரனையும், உன் பாதாரவிந்தங்களில் என்ஞான்றுமிருக்கும் புத்தியையும், இப்பதியில் மரணம் வரையும் வாழத்தக்க நிலையையும் தந்தருளவேண்டும்" என்று வேண்டினர். உடனே கங்கையைப் பாதாள வாகினியாக ஹம்ஸபுட்கரணி நடுவில் வரும்படிக் கருணை செய்து மறைந்தருளினர். விமலன் அப் புட்கரணிக் கரையில் வாழ்ந்து வரலானர். பின் கடைசியில் முத்தியடைந்தார். அவர் புத்திரனும் மகாதேவர் அருளினுல் உண்டானபடியால், மகாதேவன் என்ற பெயருடன் பெருமையாய் சிவபக்த சிரோமணியாய் விளங்கிக் கடைசியில் சிவலோக பதவி அடைந்தான். அம்மரபிலுள்ளோரும் அப்படியே விளங்கி முடிவில் உலகமடைந்தார்கள். ஆகையினுல் அத்தலத்தில் வசிப்பவர்கள் கடைசியில் வீட்டுலகம் அடைவார்கள். சிறிதும் ஐயமில்லை.

(ஸ்காந்தோப புராணம்-அகஸ்திய சம்ஹிதை-42ம் அத்தியாயம் பிரமபுரீச மகாத்மியத்தில் 6வது அத்தியாயம்)

## 7. மன்மதன் சாபநீக்கம் பெற்றது.

சூதர் சொல்லத் தொடங்கினர்: முனிவர் பெருமக்களே, வேறோர் வியப்புமிக்க செய்தியைக் கூறுகிறேன் கேண்மின்! முன்னொரு காலத்தில் தவ வலிமை மிக்கவரான விசுவாமித்திரர், பிரமனது புத்திரரும் தனக்கு விரோதமுள்ளவரு

மான வசிஷ்டரை வெல்லுவதின்பொருட்டுத் தவஞ்செய்யக் கருதி, கிழக்கு மேற்கு முதலான திசைகளில் அநேகமாயிரம் ஆண்டுகள் வசித்தும், தேவ கன்னிகைகளால் தவக்குறை அடைந்தார். இந்த உலகத்தில் என் தவம் குறைபடுவதற்கு யார் காரணமானவன்? என் மனதைக்கூடப் பேதுறச் செய்த அச்சமர்த்தன் எவன்? அவன் மன்மதனே என எண்ணிச் சபித்தார். "உன் பாணம் எவர்க்கும் பலிக்காமல் போகட்டும்" என்று சபிக்கப்பட்ட மன்மதன் பிரமனையடைந்து தோத்திரித்தான். அதனால் சந்தோஷமுற்ற பிரமாவும் மன்மதனை நோக்கி வேண்டிய வரத்தைக் கேளென்றார். மன்மதன் கேட்கலாயினன்: "விசுவாமித்திரர் தவம் செய்கின்றார்; தேவ கன்னிகைகளால் அவர் தவம் குறையை அடைந்தது. அவரோ மன்மதனாலேதான் இக் குறை வந்தது என்று கருதி என்னை விசாரிக்காமல் சபித்துவிட்டார். ஆகையால் அந்தச் சாப நீக்கத்தின் பொருட்டு ஏதேனும் உபாயமுரைக்கவேண்டும்" என்று வேண்டினன். இங்ஙனம் இரந்துநின்ற மன்மதனை நோக்கிப் பிர்மா சொன்னார்: "பூவுலகில் பிரமபுரி என்றொரு தலமுள்ளது. அவ்விடத்தில் சாப விமோசகரான இறைவன் விளங்குகிறார். உண்டாக்குவதிலும், காப்பதிலும், அழிப்பதிலும், நிக்ரஹிப்பதிலும், அநுக்ரஹிப்பதிலும் அச் சிவனைத் தவிர வேறு யாருமில்லை. ஆகையால் அவரைப் பக்தியுடன் பூசனை செய்தால் அவர் சாபத்தினின்றும் விடுவிப்பார், ஆகையினால் அங்கு போ; என் சாபம் முன்னொருதரம் அங்கு நீக்கப்பட்டிருக்கிறது. அவர் உன் சாபத்தையும் நீக்கி உனக்கு வேண்டியதையும் அளிப்பார் என்றுரைத்தார். மன்மதனும் விரைவில் பிரமபுரியை அடைந்து பிரம்மாவால் உபதேசிக்கப்பட்டபடியே நாட்பூசனைகளை விதிமுறை வழாமற் செய்து அவ்விடம் வசித்துவந்தான். அவனுக்குமுன் இறைவனும் காட்சியளித்தார். பலவிதமாய்த் தோத்திரித்தான் மாரனும். மகிழ்ந்த இறைவன் முனிவரால் ஏற்பட்ட சாபத்தை நீக்கியருளினார். சாப நீக்கம்பெற்ற மன்மதனும் பின்வருமாறு விண்ணப்பிக்க வாரம்பித்தான். "கருணைக்கடலே! எல்லா உலகுக்கும் நாதா! நான் இவ்விடத்திலேயே வசித்து உனக்குப் பணிகள்

செய்வதில் ஆசையோடிருக்கிறேன். அதன்பொருட்டு இத் தலத்தில் பிராமண குலத்தில் மறுபடியும் பிறப்பெடுத்து உம்மைப் பணிந்து அடியார் நடுவுள் இருக்க விழைகிறேன்'' என்று வேண்டிக்கொள்ள, இறைவனும் அங்ஙனமே அருள் செய்து மறைந்தார். அதனால் மன்மத அம்சம் பெற்ற வேத மறிந்த பிராமண சிரேஷ்டன் அவதரித்து அநேக வேள்வி களைச் செய்து ஈசனைப் பணிந்தெழுந்தேத்தி முடிவில் சுந்தர மூர்த்தி சுவாமிகளைக் கண்டு அவர் கருணையால், நீச ரூபர் களாய் வேடம் தரித்துவந்த சிவனுக்கு அவிர்ப்பாகம் கொடுத்து பரமேஸ்வரனுடைய கிருபையால் பக்தகோடி களுடன் சேர்ந்து சிவசாயுஜ்ய பதவியடைந்தார். சிவாக்ஞை யைப் பரிபாலித்துக்கொண்டு அத் தலத்தில் இப்போதும் இருந்துவருகிறார். நூறு வருடகாலம் அவ்விடம் வசித்து ஈசனை மாரன் பூசித்து வந்ததால் 'மாரபுரி' என்றும், அந்த மாராம்சமாய் ஜனித்த சோமயாஜியால் பூசிக்கப்பட்டு அநேக யாகங்கள் செய்யப்பட்டமையால் அத்தலம் 'மாரஜலபுரி' எனவும் விளங்கி வரலாயிற்று. ஆகையால் இந்த பிரமபுரி என்கிற தலத்தைக் காட்டிலும் உயர்ந்ததாக வேறொரு தலம் கிடையாது. 'வேதம் யொவைதாம்' என்ற ரிக் வேதத்தால் சொல்லப்பட்டது இந்த சிவத் தலமே; அத்தலத்திலுள்ள வரான சிவனே பரப்பிரஹ்மம் என்று சொல்லப்படுகிறார்.

(ஸ்காந்தோப புராணம்-அகஸ்திய சம்ஹிதை-43வது அத்தியாயம்;
பிரமபுரீச மகாத்மியத்தில் 7வது அத்தியாயம்

## 8. நந்தராசன் பிர்மஹத்தி நீங்கியது.

வெகு காலத்திற்கு முன்பு காம்போஜ நாட்டில், பரம வைதீகனும், சாஸ்திரகலா விற்பன்னனும், மன்னுயிர் காக்கும் மன்னவனும், பக்திமானும், நீதிமானும், வருணாசிரம தர்மங் களைப் பாதுகாப்பவனுமான நந்த பூபன் என்றொரு மன்னன் இருந்தான். அவன் ஓர் சமயம் வேட்டையாடுதற்காகக் காட்டிற்குச் சென்று வருகையில், ஆங்கு பிங்காஷ்டன் என்றோர் முனிவர் புலித்தோலணிந்து நிச்சலராய் இறை வனைக் குறித்துத் தவமியற்றிக்கொண்டிருந்தார். புலித் தோலை முழுவதும் மூடியிருந்த அவரை முனிவர் என்று

அறியாமல் புலியென எண்ணி அம்புகளால் எய்தான். அம்பு
களால் எய்யப்பட்ட அந்த முனிவரும் உடன் கீழே வீழ்ந்து
மரணமானார். அதைக் கண்ட. அந்த நந்தராசன் பயத்தால்
நடுங்கிய உடலுடையவனாய் மிகுந்த துக்கத்துடன் பிரலா
பித்து மூர்ச்சித்துக் கீழே வீழ்ந்தான். பின்பு ஒரு முகூர்த்தக்
காலம் சென்றபின் மூர்ச்சை தெளிந்தான். அப்போது பிரம
ஹத்தியானது சிவந்த முகமும் கோரைப் பற்களும் கூடித்
திறந்த வாயுடன் வந்து சேனையோடு கூடிய அவ்வரசனைத்
துரத்தலாயிற்று. அதைக் கண்ட சேனைகள் நகரத்தை நோக்கி
மிக வேகத்துடன் ஓடிவிட்டன. நந்த ராசனும் வெகு வேகத்
துடன் ஓடி அநேக புண்ணியத் தலங்களுக்குச் சென்றும்
பிரமஹத்தியும் தொடர்ந்தது. அதனால் மிகுந்த பயத்தை
அடைந்த அவ்வரசன் இன்னும் பல சிவத் தலங்களுக்குச்
செல்லுகையில் பிரமபுரியை அடைந்தான். அப்போது பிரம
ஹத்தியும் அத்தலத்தின் மகிமையினால் பயமடைந்து தூரத்தி
லேயே நின்றுகொண்டு அரசன் வெளியில் வருங்காலையில்
பிடிப்போம் என்பதாக நிச்சயித்துக்கொண்டு அத் தலத்தின்
வெளியிலே இருந்துவந்தது. அத்தலத்தை யடைந்த நந்த
ராசனும் சிவ சந்நிதியை யடைந்து சிரமத்தினால், கீழே
வீழ்ந்தான். அவ்விடத்துள்ள முனிவர்கள் அவனைக் கண்டு
அவன் வரலாற்றைக் கேட்டுச் சொல்லலானார்கள்: 'பரமேசு
வரனைப் பூசனை செய்! அதனால் உன்னைவிட்டுப் பிரமஹத்தி
நீங்கும்' என்றார்கள். அவனும் பிரமபுரீசனைப் பூசித்துப் பல
பாடல்களால் பரமேஸ்வரனைத் துதித்தான். பின் சிவாக்ஞை
யால் பிரம்மஹத்தியும் நாசமடைந்தது. அதனைக்கண்ட அவ்
வரசனும் நான் இனி எங்கிருக்கவேண்டும் என்று இருடிகளை
நோக்கிக் கேட்க, சாந்த மனதுடைய அந்த இருடிகளும்,
சிவபூசை மகிமையால் உன்னைவிட்டுப் பிரமஹத்தி நீங்கியது.
ஆகையால் நீ இனி பயமில்லாமல் வெளியிற் செல்லலாம். நீ
தினந்தோறும் சிவ பூசனை செய் என்று கூறினார்கள். பின்பு
அவ்வரசனும் ஹம்ச தீர்த்தத்தில் திருநீராடி ஈசனை வழி
பட்டுக் கர்ப்பகிருகம் சென்று பூசை முடித்துப் பல விதமாய்
சிவனைத் தோத்திரம் செய்து பிறகு வெளியில் வந்து இருடி
களை யண்மி, அவர்களால் கொடுக்கப்பட்ட ஆகாரத்தைப்

புசித்து, அவர்களுக்குப் பணி பல செய்து, அவர்களாற் சொல்லப்பட்ட சிவ மகிமைகளைக் கேட்டுக்கொண்டு காலங் கழித்து வரலானன். இவ்விதம் வெகு நாட்கள் சென்றன. அதன்பிறகு அவ்விருடிகள் அந்த அரசனை நோக்கி இனி மேல் நீ உன் ராஜ்ஜியத்திற்குச் சென்று ஆள்வாயாக" என்று உத்திரவு செய்தார்கள். அந்நந்தராசனும் தன் தேசம் அடைந்து மக்களைப் பரிபாலித்து வரலானன், மந்திரிகளோடு ஆலோசித்துத் தன்மகன் குணேத்தமனுக்குராஜ்யாபிஷேகம் செய்வித்து மிகுதியான பொருள்களை எடுத்துக்கொண்டு மீண்டும் பிரமபுரி சிவத் தலத்தையடைந்து சிவனையணுகி வணங்கிப் பின் இருடிகளை வணங்கிச் சொன்னன்: " ஈண்டு யான் செய்யத் தக்கதியாது? அதை எனக்குச் சொல்லுமின் முனிவரீர் " எனக் கேட்க, எல்லாவிதமான சிவ தருமங்களை யும் செய்யென்று ஆக்ஞாபிக்க, அந்தப் புன்னகவனத்தில் கைலாய நாதருக்கு பெரியவோர் சிவாலயம் நிர்மாணித்து மிகுந்த பக்தியுடன் அந்த அற்புதமான ஆலயத்தில், தத்துவ தரிசிகளான முனிவர்கள் சிலரால் ஆண்டுச் சிவனைப் பிரதிஷ்டித்து, பரிவாரங்களையும் எழச் செய்து, குளம், கிணறு முதலியவற்றை ஏற்படுத்தி விதிப்படிப் பரமேசுர னுக்கு ஆறுகால பூஜைகள் நடப்பித்து, ரதோற்சவம் முதலிய வைகளை உரிய காலத்தில் நடப்பித்து, வாகனங்கள், சகல ஆபரணத்திற்கும் பொருள் உதவி, பக்தியோடு நாட் பூசனை கள், பட்ச பூசனைகள், திங்கட் பூசனைகள், ஆண்டுப் பூசனை கள் எல்லாம் நன்ருக நடத்திவந்தார். பின்னும் சந்தோஷம் அடைந்த அந்த ராஜன் அநேக பிரகாரங்கள், மண்டபங் களெல்லாம் கட்டிவைத்துப் பொக்கிஷக் கிரஹங்கள், தானிய விடுதி வீதிகள், பிராமணர் க்ருஹங்கள், வேத சாலை, அஸ்திர சாலை, வித்யா சாலை, மடங்கள், உத்யான வனங்கள் இவ்விதமாக அந்நகரத்தைப் பெரும் பட்டினமாகச் செய்து அந்த ஊரிலேயே தானும் தன் மந்திரிமார்களுடன் இருந்து கொண்டு தினந்தோறும் மூன்று சந்தியா காலங்களிலும் ஈசனைத் தரிசித்துப் பூசித்து வரலானன். இத்தகைய நாளில் எல்லா பூதங்களையும் ஓட்டுவதான துர்பிக்ஷம் உண்டாயிற்று. அத் துர்பிக்ஷ காலத்தில் நந்தராசன் தன் பெரும் பொருளால்

மக்களையெல்லாம் காத்து வந்தான். கொஞ்ச காலத்தில் அவ் வரசனது பெரும் பொருள் சிறு பொருளாகத் தேய்ந்து விட்டது. ஒன்றும் புரியாமல் பரமேசனுன சிவபெருமானது சந்நிதியடைந்து முறையிட்டான். அப்போது 'கஷ்டம் நீங்க சங்கடஹர கணேசனைப் பூசிப்பாயாக'வென அசரீரி உண்டா யிற்று. அவ்விதமே அந்த அரசனும் கணேசர் திருமுன் சென்று எல்லா இன்னல்களையும் களைய வல்லவராகிய அக் கணேசரைத் துதித்து வேண்ட, அப்போது வாசற்படியில் சிவனுல் தூண்டப்பெற்ற கணேசரது கட்டளையால் பொன் மழை பொழிந்தது. மீண்டும் அதனுல் மக்களைப் பாதுகாத்து வரலானுன். இங்ஙனம் பலகாலம் கணபதியருளினுல் கொடை நிகழ்ந்து வந்தது. அவ்விதம் கிடைத்த அந்த ஸ்வர்ணங்களி னுல் அரசனும் மக்களை மலர்ச்சி செய்துகொண்டிருந்தான். சிவனருள் முன்னிற்கப் பஞ்சம் தொலேந்து யாண்டும் பசுமை பரவிற்று. அரசனும் அகமகிழ்ந்தான். வெகு காலம் சுகமாக அந்நந்தராசன் சிவ பக்தி செய்துகொண்டு சிவ தருமங்களை எல்லாம் சரிவரச் செய்துகொண்டு மரணகாலத்தில் சிவ சாயுஜ்ய பதவியடைந்தான்.

[அரசு செய்தமைக்கு அடையாளமாகிய பல சின்னங்கள் இன்றுமிருந்துவருகின்றன. அவையாவன: கோட்டை மைதானம், கோட்டை வாயில், விநாயகர் கோவில், சந்தை வெளி, குதிரைப் பள்ளம், சேனுதிபதி தெரு, செட்டித் தெரு, பல்லக்குக்காரத் தெரு, சானுவன் பேட்டை.]

(ஸ்காந்தோப புராணம்–அகத்திய சம்ஹிதை - 44வது அத்தியாயம்; பிரமபுரீசர் மகான்மியத்தில் 8வது அத்தியாயம்)

## 9. கோச்செங்கட் சோழன் திருப்பணி புரிந்தது.

முன்னெரு காலத்தில், பொன்னி பாயும் புகழ்ச் சோழ வள நாட்டில், மிகச் சிறப்புடன் ஆண்ட சோழப் பேரரச னுக்கு வெகு காலம் புத்திரப் பேறில்லாமல் இருந்தது; அரசனும் வருந்தி அரசியல் காரியங்களை அமைச்சர்களிடம் அளித்துவிட்டு காட்டைத் தேடியலேந்து அவ்விடத்திலுள்ள இருடிகளைக் கண்டு வணங்கித் தன் குறையை முறையிட்டுக்

கொண்டான். அவ்விருடிகள் அந்த அரசனை நோக்கி ஈசனைக் குறித்துத் தவம் செய்தால் புத்திரப் பேற்றையடைவாய் என்று மந்திரோபதேசம் செய்தார்கள். அவ்விதமே அச் சோழன் தவம் செய்துவந்தான். வெகு காலம் சென்றபின் கருணைக் கடலாகிய ஈசன் அவன் தவத்துக்கிரங்கி அவன் முன் காட்சி கொடுத்து நீ விரும்புவதைக் கேட்கலாமென்று சொல்ல அந்த ராசனும் 'தனக்குப் பிற்காலம் இச் சோழ நாட்டை ஆண்டுவரவும் தங்களைப் பூசித்துப் பக்தி செய்தும் வரும்படியான மகப்பேற்றை விரும்புகிறேன்; தயையுடன் அருள் தரவேண்டும்' என வரம் வேண்டினன். அவ்விதமே ஈசன் அருள் புரிந்து மறைந்தார். அரசனும் நாட்டை அடைந்து அரசியல் காரியங்களைக் கவனிக்கலானான். கொஞ்ச காலம் சென்றதும், சிவனின் கருணையால், அரசன் பெருந் தேவியும் கர்ப்பமுற்றாள். [அச்சமயத்தில் அரசனுக்குச் சொந்தமாகவுள்ள காட்டில் ஒரு நாக மரத்தடியில் அழகிய சிவலிங்கமொன்று இருந்துவந்தது. அந்த லிங்கத்தை ஓர் யானை கண்டு தினமும் மிக மகிழ்ச்சியுடன் பூசித்து வருவதாக ஏற்பாடு செய்து ஓர் தீர்த்தமுண்டாக்கி அந்தத் திருமஞ்சன நீரைத் துதிக் கையால் முகர்ந்து வந்து ஈசனுக்குத் திரு முழுக்காட்டி பூசித்து வந்தது. இவ்விதமே ஓர் சிலந்தியும் அவ்வீசனை ஆராதித்துக்கொண்டு வாயினால் வலைசுற்றி பந்த லிட்டு வழிபட்டுவந்தது. தினம் அவ்வலை அறுந்து கிடப்ப தைக் கண்ட சிலந்தி சந்தேகமுற்றுச் சிவலிங்கத்தின்பின் இருந்து கவனித்துக்கொண்டிருந்தது. யானை வழக்கம் போலவே துதிக்கையால் நீர் கொணர்ந்துத் திருமுழுக் காட்டும்போது, அதைக் கண்டு சினமுற்று அச் சிலந்தி அந்த யானையின் நாசி வழியே உள்ளே சென்றது. ஈசனும் யானைக் குத் தரிசனம் கொடுத்தாட்கொண்டார். சிலந்தியின் சீவனும் பரமசிவன் கருணையால் சோழ மன்னன் அரசுக்குரிய பெருந்தேவி கருவை வந்தடைந்தது.] கருவும் கால முறைப்படி வளர்ச்சியடைந்து, பத்தாவது மாதம் பேறு நெருங்க மன்னன் மனைவியும் பொறையுயிர்க்கும் வேதனைப் படலானாள். அரசன் சோதிடரைத் தருவித்து வினவ, இந்த லக்கினத்தில் பொறையுயிர்த்தாற் கேடு விளையும்; அடுத்த

லக்கினத்தில் பொறையுயிர்த்தால் நன்று மலரும் என்று உரைக்க, தாதியர்மூலம் அறிந்த அரசி, ஓர் நீளமுள்ள கயிற்றால் இடுப்பைச் சுற்றித் தலைகீழாயிருந்து அடுத்த சுபலக்னத்தில் ஓர் ஆண் மகவை ஈன்றெடுத்தாள். அதிக நாழிகை குழந்தை அவத்தைப்பட்டதால் அதன் கண்கள் சிவப்பாயிருந்தன. அதனால் கோச்செங்கணன் என்ற பெயரோடு வளர்ந்து வருவதாயிற்று அக்குழந்தை. பின், அரசன் ஜாதகர்மாதிகள் செய்வதற்காகச் சோதிடர்களை அழைத்து நாள் குறிப்பிடச் சொல்ல, அவர்கள் ஜாதகத்தைக் கவனித்து முற்பிறப்பில் செய்த பிரமஹத்தி நீங்க, யானை அநுஷ்டித்த படி சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்வித்துப் பிறகுதான் சாதகர்மங்கள் செய்தல் வேண்டும் என்றார்கள். குழந்தையும் தாயும் ஆயிரத்தெட்டு இதழ்களையுடைய தாமரை மலர்களினால் சிவனைப் பூசித்து வரவும், திருவானைக்கா முதலிய யானையேறுத் திருப்பணிகள் உடையதாய் அறுபத்துமூன்று சிவாலயங்களை உண்டாக்கி, ஈசனை வழிபட ஈசனும் பிரசன்னமானார்; அவனது வேண்டுகோட்கிணங்க பிரமஹத்தி தோஷமும் நீங்கிற்று. அக்காலம் தொட்டு இப் பிரமபுரீசருக்கு வடபால் ஜம்புகேசுரர் விளங்கிவரலானார். பின்னர் அத் தந்தையரசனும் சிவபதவியடைந்தான். அக்கோச்செங்கட் சோழனும் நீதி வழுவாது அரசியல் நடாத்திச் சிவலோகப் பதவியை அடைந்தான். அத் தலத்துள்ள பிரமபுரீசரும் ஜம்புகேசுரரும் பக்தர்களின் வேண்டுகோளை நிறைவேற்றி வீடளித்து வரலானார்கள்.

[பிரம்மபுரீச மகாத்மியத்தில் 9வது அத்தியாயம்.]

## 10. சோமயாகச் சிறப்பும், சோமயாஜி சரிதமும்.

மிகப் புண்ணியத்தைத் தருவதான சிவனுடைய இருக்கைகளில், அம்பராம்பபுரி என்ற தலம் தனிச் சிறப்புடையது. அத் தலத்தில், முன்னொருகால் மாரன் என்பவனை மன்மதனுடைய அம்சமுள்ள சோமயாஜி மாரர் புனித அந்தணர் மரபில் அவதரித்தார். அவர் இல்லம் மாகேசுவர பூசைக்காக எப்போதும் எண்ணற்ற சிவனடியார்களால் நிறம்பப்பெற்றிருக்கும். உருத்திராக்கத்திருநீறு அணிந்தவர்

களானமையாலே அவர்கள் துன்மார்க்கிகளா யிருந்த போதிலும் சன்மார்க்க சாதுக்களைப் போலவே நினைத்துக் கொண்டாடுவார். வேள்விகள் பலவும் செய்தார். பல சாத்திரங்களையும் கற்றார். ஐந்தெழுத்தே எம்மந்திரத்தினும் இணையில்லாதது என எண்ணி செபித்தும் சிவனடியார்களைச் சேவித்தும் மிக்க குணசீலராய் விளங்கினர் அவர். ஒரு சமயம் பங்குனி மாதம் யாத்திரை சென்ற காலத்தில், திருவாரூர் தியாகேசப் பெருமானது வைபவத்தைக் கண்ணாரக் கண்டு, அங்கே வசித்து வரல் வேண்டுமென நிச்சயித்து, கமலாலயத்தில் நீராடித் தியாகேசனைப் பூசித்துக் கொண்டு சுந்தரமூர்த்தி நாயனாரது நட்பைக் கருதி ஆங்கு வாழ்ந்து வரலானார். அவர் தன் மனைவிக்குக் கீழ்வரும் விரதத்தை உபதேசித்தார்: "என்னுடைய வேலை ஈசன் துதி பாடல். உன் வேலை இறைபுகழ் கேட்டலும், வந்த சிவனடியார்களை வயிறார உண்பிப்பதுமாகும்" என்று. ஓர் எண்ணம் இவர்தம் உள்ளத்தில் தோன்றியது. "இந்த உடலுடனேயே தியாகேசனைப் பார்க்கவேண்டும்; அதற்கென்ன உபாயம்" என்று சிந்தனை செய்யுங் காலத்தில், சுந்தரமூர்த்தி நாயனாரின் இஷ்டமுள்ளவளான பரவை நாச்சியாரின் அதிருஷ்டமே அதிருஷ்டம்! தோழமை முறையில் தியாகேசப் பெருமானைத் தன் இல்லத்துக்கு வர அருளப்பெற்ற அவளே அதிருஷ்டசாலி என்றெண்ணி அவளுக்குத் தொண்டு செய்யவேண்டும் என்றெண்ணியவராய், ஈசனைத் துதித்து நித்திய கருமங்களைச் செய்து, தூதுளம்பூ, காய், கீரை இவைகளால் சேடிகளின் மூலம் அவளை மகிழ்ச்சிப் படுத்தலானார். ஒரு வருடம் சென்றது. பின்னொருநாள் அந்த சுந்தரமூர்த்தி நாயனாரின் வேசி இந்த அந்தணரை சேடிகள் மூலம் அறிந்து வணங்கி ஆசி பெற்றுப் பின் கேட்கலானாள்: "நீரோ தீட்சிதர் மரபுதித்தவர். நானோ ஓர் விலை மாது. தினந்தோறும் தூதுளம்பூ அசூஷதை இவைகளைக் கொடுத்து வருகின்றீர்! இதன் பிரதி பலன் யாது? சிவனடியார்களுக்கு விருப்பமான உண்டி உடைகளைக் கொடுப்பதில் சிறந்தவர் எனப் புகழ் உடைய நீர் என்னிடம் விரும்புவதை ஐயமின்றிக் கேட்கலாம்" என்றாள். மாறனும் கேட்கலானான்

"பாக்கியவதி! நான் பகர்வதைத் தயையுடன் கேட்பாயாக. உன்னைக் கண்டதே என் பாக்கியமாகும். அதிலும் உன்னிடத்தில் இரவலன் என்றது இன்னும் பாக்கியமாகும். இந்த உன்னுடைய மொழி எனக்குச் சிறந்த பயனாகும். உன் பிரிய சுந்தரரை ஒரு நாள் என் இல்லத்திற்கு வரச் செய்யவேண்டும். என்னிடம் கருணைசெய்" என்றார். அவளும் வாக்களித்து அவரை வீட்டிற்கு அனுப்பிவைத்தாள். யாகம் செய்யும் அந்த மாரனது வரலாறு கேட்டு அவளிடம் அவ்வாறேயாகுக என்றுரைத்து சுந்தரமூர்த்தி அவ்வந்தணரது இல்லத்தையடைந்தார். வந்த சுந்தரமூர்த்தியைக் கண்டு அந்த மாரனும், உபசாரங்கள் பல செய்து பூசித்துப் பிரார்த்திக்கலானார். "ஸோமயாகம் என்ற யாகம் செய்ய உத்தேசித்திருக்கிறேன். அதற்குத் தங்கள் உபகாரத்தை எதிர்பார்க்கிறேன். தாங்கள் என்மேல் தயைகூர்ந்து தங்கள் தோழப் பெருமானாயுள்ள தியாகப் பெருமானை அந்த யாகத்தில் நேராக அவிர்ப் பாகம் பெற்றுக்கொள்ளச் செய்யவேண்டும். மகான்களின் காட்சியால் எல்லா சோகங்களும் மறைந்துவிடுமல்லவா? உங்கள் கருணையால்தான் தன்யனானேன்" என்று வேண்ட சுந்தரரும் அப்படியேயாகுக எனக் கூறி விடைபெற்று ஆரூரையடைந்து தியாகேசப் பெருமானைக் கண்டு பூசனை முதலியன முடித்த பின்னர் பரவையார் மாளிகையடைந்தார். ஸ்ரீ சோமயாஜி மாரரின் கோரிக்கையை நிறைவேற்றிவைக்காமல் வீடடைந்ததால் பரவையர்க்கூடல் உண்டாகிக் கதவைத் திறவாமையால் மறுபடியும் சுந்தரர் தியாகேசப் பிரான் திருமுன்பையடைந்து, சோமயாஜியின் வேள்விக்கு எழுந்தருளவேண்டும் என்று பிரார்த்தித்துக் கேட்க "வரலாம் ஆனால் மிக ஜாக்கிரதையுடன் யாகத்தை நடத்தச் சொல்வாயாக" என்று ஈசன் திருவாய் மலர்ந்தார். சுந்தரர் திரும்பி மாளிகைக்கு வந்துசேர்ந்து பரவையிடம் தெரிவித்துச் சந்தோஷமடைந்திருந்தார்கள். மறுநாள் வழக்கம்போல் தூதுளம்பூ, காய் கீரைகளுடன் பரவையரின் மாளிகையடைந்து சுந்தரரை வணங்கிநின்றார் சோமயாஜி. சுந்தரரும் "யாகம் ஜாக்கிரதையுடன் நடக்கட்டும்; ஈசன் எப்படியும் வருவார். அவரைக் கண்டு அவிர்ப்

பாகம் கொடுத்தல் உன் கடமை" என்று சொன்னார். சோமயாஜியும் தன்மனைவியை அழைத்துக்கொண்டு சுவர்க்க புரமென்னும் ஊரையடைந்து யாகத்தை விதிமுறைப்படிச் செய்ய, அக்காலத்தில் எல்லா வல்லமை மிக்க தியாகேசப் பெருமான் தன் வாகனத்தைச் செத்த கன்றாகத் தோளிற் றாங்கியும், நான்கு வேதங்களையும் நான்கு நாய்களாகவும், பூணூலை மத்தளமாகவும், அட்டதிக்கு பாலர்களை தப்பு தம்பட்டம் முதலியவற்றை அடிப்பவர்களாகவும், உமையை நீச ஸ்திரீயாக ஞானப் பாலை மதுக் குடமாகத் தலை யேந்தி வருபவளாகவும், விநாயகர் சுப்பிரமணியரை குழந்தை களாகத் தன்னைச் சூழ்ந்துவர சண்டாள ரூபமெடுத்து யாக சாலையை அணுகினார். யாகசாலையிலுள்ள பிராமணர்கள் "ஏ நீசனே ! இங்கெங்கே வந்தாய்? தூரப்போ" எனக்கூச்சலிட் டார்கள். ஈசன் கொஞ்சம் ஒதுங்குவதாகப் பாவனை செய் தார். அந்த இடம் இப்போது ஒலியப்பர் கோவில் என விளங்கி வருகிறது. நீசர்களால் அசுத்தமடைந்தது என்ப தாக நினைத்த அந்த யாகசாலையிலுள்ள பிராமணர்களிற் சிலர் நாலாபக்கங்களிலும் விழுந்தோடலானார்கள். இவ்வித மான குழப்பத்தில் கலவரமடைந்த மாரன் கணபதி அனுக் ரகம் செய்ய ஈசனும் யாகசாலைக்குள் பிரவேசித்தார். உடனே சோமயாஜியும் பத்தினியான சுசீலையுடன் வர, சுந்தரர் முன்னம் சொல்லப்பட்டது நினைவுக்கு வர, பரமேசுரனே இவ்விதம் வந்திருப்பதாக எண்ணி, அர்க்கிய பாத்யாதி களால் உபசரித்துப் பூசித்துவர அவிர்பாகம் ஸ்ரீ தியாகேசப் பெருமானுக்குநேரில் கொடுக்க ஈசன் உடனே கருணைகூர்ந்து இடபாரூடராய் உமை, கணபதி, ஸ்கந்தர், திக்குப் பாலர் இவர்களுடனே சுயரூபமெடுத்துக் காட்சி கொடுத்தருளினார். இதைக் கண்ணுற்ற பிரம விஷ்ணுவாதி தேவர்கள் ரிஷிகள் முதலானோர் புட்பமாரி பொழிய அந்த சோமயாஜியைப் பார்வையுடன்கூட ஐக்கியம் செய்துகொண்டார். ஓடிய பிராமணர்களும் திரும்பி அவ்விடம் வர, "நீங்கள் என்னைத் தூஷித்து ஓடினமையால் சண்டாளர்களாகப் பிறக்கக் கடவீர் கள்" என்று சபித்தார். அந்தச் சாபத்தைக் கேட்டுச் சுவாமியின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கிப் பலவாறு

துதித்து வேண்டினர். ஈசன் அவர்கள்மேல் கருணைகூர்ந்து நான் சொன்னபடி ஒவ்வொரு தினமும் மத்தியானம் ஒரு முகூர்த்தம் ஈசத்வத்தையடைந்து மற்ற வேளைகளில் பிரா மணத்வமாவீர்கள் என்று உரைக்க, உதங்க மதங்காதிகளால் மறுபடியும் வேண்டிக்கொள்ள மறுதினம் காலை அவர் களுக்கு மஹாகாள க்ஷேத்திரங்களில் காட்சி கொடுத்து அருள்புரிந்தார்.

[இவ்வற்சவம் வருஷந்தோறும் வைகாசி மாதம் ஆயில்ய நக்ஷத்திர தினத்தன்று அம்பருக்குப் பக்கத்திலுள்ள ஸ்ரீ மகாகாளநாத சுவாமி வீற்றிருக்கும் மாகாள தலத் தில் (கோவில் திருமாளம் என வழங்கி வருகிறது. பூந் தோட்டம் ஸ்டேஷனிலிருந்து அம்பருக்கு வரும் ரஸ்தா மத்தியில் $1\frac{1}{2}$ மைல் தூரத்திலிருக்கிறது.) இன்றும் நடை பெற்று வருகிறது.]

★

(இவ்வூரின் கீழ் எல்லையில் சாஸ்தா (அய்யனார்) கோவில் ஒன்றுள்ளது. அவரங்கிருந்தே தவஞ் செய்துகொண்டும், காவல் புரிய வேண்டியது பற்றி, நந்தி யெம்பெருமான், இறைவனை மறைத்துக் கொள்ளாது நேரில் தவம் செய்ய வரம் பெற்றமையால், இறைவன் ஆணையால், சந்நிதியின் தென்பால் கொஞ்சம் ஒதுங்கியிருக்கின்றார்.)

★

[சங்கார சீலனைக் கொன்ற பைரவரே (ஆபதோத் தாரணர்) ஸ்ரீ சட்டைநாதசுவாமி என்ற திருநாமத்தோடு இத் தலத்தின் அக்னி திக்கில் தனிக்கோவில்கொண்டு திகழ்கின் றார். வருடந்தோறும் பத்து நாட்கள் கொண்டாடப்பெறும் விழாவின் கடைசி நாளாகிய வருடப் பிறப்பன்று காவடி அபி ஷேகமும், கோவிலின் உட்புறத்திலுள்ள சூல தீர்த்தத்தில் ஸ்ரீ சட்டைநாதர் எழுந்தருளி தீர்த்தங் கொடுத்தலும், இரவு வீதியுலாக்காட்சியும் இன்றும் நடைபெற்று வருகிறது. இம் மூலவருக்கு நீர் அபிஷேகம் செய்யப்படுவதில்லை. புனுகு சட்டம் பிழியப்பட்டதை மாத்திரமே சிவாசாரியார்கள் நியம நிஷ்டையுடன் ஈர வஸ்திரத்துடனேயே சென்று சாத்துதல் வேண்டும்.]

## சிலம்பி வரலாறு.

இந் நகரில் வசித்து வந்த தேவதாசியும், கோவிலில் தொண்டு செய்பவளுமான சிலம்பி, சிவ சிந்தனையும், "பெரியோர் சொல் வாக்குப் பலிதமாகும்" என்ற கருத்தும் உடையவள். யாதா மொரு புலவரையோ, கடவுள் பாற் செறிந்த பக்தியுடையவரிடமோ சென்று, அவர் ஆசி பெற்று மேன்மையடையவேண்டு மென்று தக்க சமயத்தை எதிர் பார்த்திருந்தாள். சோழஅரசன் பால் வருத்தமுற்றுப் புறப் பட்ட கம்பநாட்டாழ்வார் இங்கே வந்து தெய்வானுகூலத் தால் சிலம்பியின் வீட்டில், களைப்பு மேலிட வந்து தங்கினார். சிலம்பி இரங்கி, உபசரித்து விருந்தளித்தாள். தன் கருத்தையும் அவரிடத்தில் தெரிவித்தனள். கம்பர், ஆயிரம் பொன் கொடுத்தல் வேண்டு மெனக் கூறினர். சிலம்பி தன்னுடைய தென்பதான எல்லாவற்றையும் விற்று ஐநூறு பொன் காசுகளையும் புலவர் முன் வைத்து வேண்டி நின்றனள். புலவர், பொற்காசுகளைப் பெற்றுக் கொண்டு வீட்டின் சுவற்றில்

> ***"தண்ணீருங் காவிரியே, தார்வேந்தும் சோழனே***
> ***மண்ணாவதும் சோழமண்டலமே—பெண்ணாவாள்"***

என்று இரண்டடிகளையும் எழுதி வைத்து விட்டுப் போய் விட்டார். சிலம்பியோ; அவ்விரண்டடிகளைப் பார்த்துப் பார்த்து, தன் விதியை நொந்துக் காலத்தைக் கடத்தி வந் தாள். நற்காலம் வந்தனுக, ஔவைப்பாட்டி மிருந்த களைப் புடன் சிலம்பி வீட்டுத் திண்ணையில் வந்து படுத்திருந்தனள். தற்செயலாக வீட்டினுள்ளேயிருந்து வெளியே வந்த சிலம்பி கண்டுபசரித்து ஆகாரம் கொடுத்தனள். களைதீர்ந்தெழுந்த மூதாட்டி சுவற்றிலுள்ள, கவி முடியாதிருப்பதன் காரணத் தைக் கேட்ட அம் மாத்திரத்திலேயே, சிலம்பியின்பால் மனமிரங்கி அச் செய்யுளைப் பாடி முடித்தனர்.

> ***"அம்பர்ச் சிலம்பி அரவிந்தத் தாளணியும்***
> ***செம்பொற் சிலம்பே சிலம்பு".***

இச்செய்யுள் முடிவுற்ற காலந் தொடங்கிச் சிலம்பி மேன் மேலும் பல பல நன்மைகளையும், மேன்மையையும் அடைந்து ஈசனை வழிபட்டுச் சிவ சாயுஜ்யம் எய்தினள்.

இத்தலத்தையும் இதில் கோயில் கொண்டுள்ள ஈசனையும் குறித்து ஞானசம்பந்த மூர்த்தி நாயனார் பல பதிகங்கள் பாடியிருக்கிறார். அதோடு திருநாவுக்கரசு நாயனார், திருச் சிவபுரத் திருத்தாண்டகச் செய்யுளில், "அம்பர்நகர்ப் பெருங் கோயிலமர்கின்றான் காண்" என்றும், திருநாகைக்காரோ ணத் திருத் தாண்டகச் செய்யுளில் "அன்னமாம் பொய்கை சூழ் அம்பரானை" என்றும் பாடியிருக்கிறார். முருகனருள் பெற்ற அருணகிரிநாதரும் இத்தலத்திலுள்ள முருகபிரானை தரிசித்து, திருப்புகழ் பாடல் ஒன்றும் பாடியிருக்கின்றார். ("சோழ மண்டலம் பரவுக...... சோழ மண்டலஞ் சாரும் அம்பர் வளர் – தம்பிரானே")

★

## திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய பதிகங்கள்.

திருச்சிற்றம்பலம்.

பண்: காந்தாரபஞ்சமம் இராகம்: கேதாரகௌளம் தாளம்: ஆதி

**1. எரிதர அனல்கையில் ஏந்தி யெல்லியில்**
**நரிதிரி கானிடை நட்டம் ஆடுவர்**
**அரிசிலம் பொருபுனல் அம்பர் மாநகர்**
**செங் கண்ணவன் கோயில் சேர்வரே.**

எரிகின்ற அனலை ஏந்திய கரத்தராய், நரிகள் ஊளை யிட்டுத் திரிகின்ற காட்டினில் நள்ளிரவில் நடமாடுமியல்பின ராகிய எம்பெருமான், அலை மோதுகின்ற நீர் நிறைந்த அரிசிலாற்றின் கரையில் திகழும் அம்பர் மா நகரத்தில், கோச்செங்கட் சோழனால் ஆக்கப் பெற்ற திருக் கோயிலை யிடமாக விரும்பி எழுந்தருளியிருக்கின்றார். சென்று அவ ரடியிற் சேருமின்.

2. மையகண் மலைமகள் பாக மாயிருள்
கையதோர் கனலெரி கனல ஆடுவார்
ஐயநன் பொருபுனல் அம்பர்ச் செம்பியர்
செய்யகண் ணிறைசெய்த கோயில் சேர்வரே.

மை தீட்டிய கண்களையுடைய உமையை ஒரு பாகத்திற்கொண்டு, கையில் அனல் கனன்றிட இருளிடத்தே (நள்ளிரவில்) நின்று நடனமாடுமியல்பினராகிய எம்பெருமான் நீர்வளம் செறிந்த திரு அம்பர் மா நகரில் கோச்செங்கட் சோழன் ஆக்கிய கோயிலேயிடமாகக்கொண்டு தங்கியிருக்கின்றார். சென்று பக்திசெய்து அவனடி சேர்மின்.

3. மறைபுனை பாடலர் சுடர்கை மல்கவோர்
பிறைபுனை சடைமுடி பெயர ஆடுவர்
அறைபுன னிறைவயல் அம்பர் மாநகர்
இறைபுனை எழில்வள ரிடம தென்பரே.

ஓசைமிக்க நீர் நிறைந்த வயல்களால் சூழப்பட்ட அம்பர்மா நகரினை வேதப் பாடல்களைப் பாடுபவராய் கையில் அக்கினி நிறைந்திட, திங்களை முடித்த திருச் சடைகள் தாழ்ந்தசைந்து ஆடிட நடனம் ஆடுகின்ற எந்தையாகிய சிவபெருமான் இது அழகுமிக்க இடமென்று சொல்வார்.

4. இரவுமல் கிளமதி சூடி யீடுயர்
பரவமல் கருமறை பாடி யாடுவார்
அரவமோ டுயர்செம்மல் அம்பர்க் கொம்பலர்
மரவமல் கெழிநகர் மருவி வாழ்வரே.

இரவிடை நிறைந்த இளம்பிறையினைச் சூடியவராகி ஒப்பிலதாய் உயர்ந்த தன்மை மிகப் பரவிடுதற்கு, நிறைந்த புகழுடையதாய், யாவரும் எளிதில் உணர்தற்கரியதான வேதப் பாடல்களைப் பாடியாடுவார். எந்தை, யாவராலும் போற்றுதல் ஓவாத ஓசையோடு, உயர்ந்த மலர்கள் நிறைந்த கொம்புகளோடு கூடிய மரங்கள் நிறைந்து, அழகு மிளிர் அம்பர் மா நகரினை இடமாக்கொண்டு மருவிவாழ்வார்.

5 சங்கணி குழையினர் சாமம் பாடுவார்
வெங்கனல் கனறா வீசி யாடுவார்
அங்கணி விழவமர் அம்பர் மாநகர்
செங்கண னிறைசெய்த கோயில் சேர்வரே.

அழகிய சங்கைத் திருக்காதிலணிந்தவர், சாமவேதம் பாடும் திருவாயினர், திருக்கரத்தில் கனல் கனன்றிட கை வீசி ஆடுகின்ற இறைவர், அழகிய திருவிழாக்கள் திகழ்கின்ற அம்பர் மா நகரிடை, கோச்செங்கட் சோழர் செய்த கோயிலை யிடமாகக் கொண்டு வீற்றிருந்தருள்பவர்.

6 கழல்வளர் காலினர் சுடர்கை மல்கவோர்
சுழல்வளர் குளிர்புனல் சூடி யாடுவார்
அழல்வளர் மறையவர் அம்பர்ப் பைம்பொழில்
நிழல்வளர் நெடுநக ரிடம தென்பரே.

ஓசையுடைய சிலம்புகளணிந்த சேவடியராய், சுழல் மிகுந்த குளிர்ந்த கங்கையை சடையில் தரித்தவராய், அனல் ஏந்திய கரத்தினையுடையவராய் ஆடுபவராகிய சிவபெருமான் எந்தையாரது இடமெனை, அக்கினிக் காரியங்களைச் செய்கின்ற அந்தணர்களோடு பசிய நிழல் வளர்கின்ற சோலைகள் செறிந்து நீண்ட அம்பர்மா நகரத்தினைச் சொல்வர்.

7. இகலுறு சுடரெரி யிலங்க வீசியே
பகலிடம் பலிகொளப் பாடி யாடுவார்
அகலிட மலிபுகழ் அம்பர் வம்பவிழ்
புகலிட நெடுநகர் புகுவர் போலுமே.

பகற்போதிற் பாடிப் பிச்சை கொண்டும், இரவில் கரத்தில் கனல் ஏந்தி நின்று நடனம் ஆடும் இயல்புடையவர் எம்பெருமான். மணம் நிறைந்த மலர்கள் நிறைந்துள்ள பூஞ்சோலைகளையுடையதும் யாவர்க்கும் புகலிடமா யுள்ளதுமான அம்பர் நகர்ப் பெருங் கோயிலிலமர்ந்து அருள் புரிகின்றார்.

8. எரியன மணிமுடி யிலங்கைக் கோன்தன்
கரியன தடக்கைக ளடர்த்த காலினர்
அரியவர் வளநகர் அம்பர் இன்பொடு
புரியவர் பிரிவிலாப் பூதஞ் சூழவே.

தீயினைப்போற் சிவந்த ரத்தினங்களாலிழைத்த முடியினையுடைய இலங்கையரசன் இராவணன், கருமை மிகுந்து தன் கைகளால் கயிலையைப் பெயர்த்தபோது, கைகளொடியும்படி செய்த கால்களுடைய எம்பெருமான் யாவர்க்கும் உணர்தற்கும், அறிதற்கும் அரியவர் எனினும், அம்பர் நகர்ப் பெருங் கோயிலமர்ந்து அடியார்களுக்கு அருள் புரிகிறார்.

9. வெறிகிளர் மலர்மிசை யவனும் வெந்தொழில்
பொறிகிளர் அரவணைப் புல்கு செல்வனும்
அறிகில வரியவர் அம்பர்ச் செம்பியர்
செறிகழ லிறைசெய்த கோயில் சேர்வரே.

மலரவனுகிய பிரமனும், பாம்பணையிற் பள்ளிகொண்ட திருமாலும் காணுதற்கு இயலாத தன்மையராம் எம்பெருமான் எனினும், அம்பர் நகர்ப் பெருங்கோயிலமர்ந்து அடியார்க்கு அருள் புரிவார்.

10. வழிதலை பறிதலை யவர்கள் கட்டிய
மொழிதலைப் பயனென மொழியல் வம்மினோ
அழிதலை பொருபுனல் அம்பர் மாநகர்
உழிதலை யொழிந்துள் ளுருமையுந் தாமுமே

சீர்வளம் செறிந்த அம்பர் நகர்ப் பெருங்கோயிலில் எம்பெருமான் அம்மையப்பராய் என்றும் மன்னி வீற்றிருக்கின்றார். சமணர் முதலிய பிற மதத்தினர் கட்டியமைத்த பொய், மாயப் பேச்சுக்களை உறுபயன் தருவதென எண்ணிக் கொண்டு பேசாதீர்கள். வருவீர் எம்பெருமானைப் பணிந்து போற்றுவீர்களாக.

11. அழகரை யடிகளை அம்பர் மேவிய
நிழறிகழ் சடைமுடி நீல கண்டரை
உமிழ்திரை யுலகினில் ஓதுவீர் கொண்மின்
தமிழ்கெழு விரகினன் றமிழ்செய் மாலையே.

நீலகண்டத்தையும் ஒளி திகழும் சடையையும் உடையவராகிய எம்பெருமான் அம்பர் நகர்ப் பெருங் கோயிலில் அமர்ந்திருக்கின்றார். தமிழ் விரகன் ஞானசம்பந்தன் தமிழாலாக்கிய இம்மாலையை உள்ளத்திற் கொண்டு கடல்சூழ் உலகினில் உறுபயனடைய வேண்டி விருப்புடன் ஓதுவீர்களாக.

ஆடும் பரிவேல் அணிசே வலெனப்
பாடும் பணியே பணியா யருள்வாய்
தேடும் கயமா முகனைச் செருவில்
சாடும் தனியா னைசகோ தரனே.

திருச்சிற்றம்பலம்.

